# ஜீவனும் அனுவும்

## மனிதனின் மிகப் பெரிய சாதனைகளை நினைவு கூர்கிறார்கள்

சிகாகோவிலுள்ள ஸியர்ஸ் டவர் என்பது உலகத்திலேயே மிக உயரமான கட்டிடமாகும். 1454 அடி உயரமான இக்கட்டிடத்தில் 110 மாடிகள் உள்ளன. இதில் உள்ள 103 மின் ஏற்ற மாடங்கள் (எலிவேட்டர்) 16,700 மக்களுக்கு சேவை புரிகின்றன.

ரஷ்யாவிலுள்ள, 'மதர் லாந்து' என்பது உலகத்திலேயே மிக உயரமான சிலை. 270 அடி உயரமுள்ள இச்சிலை குதுப் மினாரைக் காட்டிலும் 18 அடி குறைவான உயரமுள்ளது.

அப்போலோ 13 (1970) சந்திரனின் தொலைப்பகுதியைத் தொட்டபோது அதைச் செலுத்திய விண்வெளி வீரர்கள், மனிதன் பூமியிலிருந்து தள்ளியிருந்த மிகத் தொலைவு தூரம் 248,665 மைல்கள் என்ற சாதனையைப் புரிந்தார்கள்.

பிக்கார்டும், வால்ஷும் 1960ல் கடலுக்கடியில் மிக ஆழத்தில் பிரயாணம் செய்திருக்கிறார்கள். 15,820 அடி ஆழத்திற்குச் சென்று அவர்கள் கடலின் அடித்தளத்தை அடைந்திருக்கிறார்கள்.

"ப்ளூ ப்ளேம்" என்பது மிக வேகமாக நிலத்தில் செல்லும் சக்கர வண்டி. 1970ல் உடாவிலுள்ள போன்வில்லி சால்ட் ப்ளாட்ஸ் என்னுமிடத்தில் அது மணிக்கு 650 மைல் வேகத்தை எட்டியது.



அடுத்தது : இரு சுட்டிகளும் உலகத்திலேயே விசித்திரமான உருவங்களை அறிமுகப்படுத்துகிறார்கள்.

# மங்கை

## தீபாவளி மலர் - 1980



லட்சுமி, அநுத்தமா, கோமகள், சிவசங்கரி, விமலா ரமணி, பி. ரங்கநாயகி, அநுராதா ரமணன், லட்சுமி ராஜரத்தினம், ஜெய லலிதா, கமலா சடகோபன், நாகேஸ்வரி சோமசுந்தரம்—ஆகியோரின் கதைகள்.



தங்கள் கதைகளில்—தங்களுக்குப் பிடித்த பெண் கதாபாத்திரங்கள் பற்றி பிரபல எழுத்தாளர்கள்—

தி. ஜானகிராமன், அசோகமித்திரன், கோவி. மணி சேகரன், பி. வி. ஆர்., சு. சமுத்திரம், தாமரை மணா ளன், ராஜேந்திரகுமார் ஆகியோர் எழுதுகிறார்கள்.



வண்ணத்தில் துவாரகா கிருஷ்ணன்



ரவிவர்மாவின் ஓவியம்

மற்றும் எழில் நிறைந்த வண்ணப் பகுதிகள்.

விலை ரூ. 6/-

# அம்புலிமாமா

## கேமல்

### வண்ணப் போட்டி

நுழைவுக் கட்டணம் கிடையாது





**பரிசுகள் வென்றிடுவீர்!**

**கேமல்—முதல் பரிசு ரூ. 15**
**கேமல்—2வது பரிசு ரூ. 10**
**கேமல்—3வது பரிசு ரூ. 5**
**கேமல்—5 ஆறுதல் பரிசுகள்**
**கேமல்—10 சான்றிதழ்கள்**

புள்ளியிட்ட இடங்களில் வெட்டவும்.

12 வயதுக்குட்பட்ட மாணவ மாணவியர் மட்டுமே பங்கெடுக்க முடியும். மேலுள்ள படத்தை ஏதேனும் கேமல் வண்ணம் உபயோகித்து வண்ணம் தீட்டவும். வண்ணந்தீட்டிய படங்களை இம் முகவரிக்கு அனுப்பவும்
P.B. No. 9928, COLABA, Bombay-400 005. முடிவுகள் தீர்ப்பானது. இதுபற்றிய கடிதத் தொடர்பு வரவேற்கப்பட மாட்டாது.

Name ______________________ Age ________

Address ______________________________

தயவு செய்து உங்கள் பெயர் மற்றும் முகவரியை ஆங்கிலத்தில் எழுதவும்.

Vision

தயவு செய்து முழுப் படத்தையும் பெயிண்ட் செய்ய வேண்டும்.

**CONTEST NO.17**

நுழைவுகளை இத் தேதிக்கு முன் அனுப்பவும் 29-11-1980

# என் பிறந்தநாளுக்கு புதிய புத்தகம்

# ஒரு யூகோபாங்க் பாஸ் புத்தகம்



எல்லாப் பரிசுகளையும் விட மேலான பரிசு. அதுவே எனது யூகோபாங்க் பாஸ் புத்தகம். அம்மா, உன் நல்லெண்ணத்திற்கு எனது நன்றி! அதோடு, என்னுடைய சேமிப்பை பெருக்கும் யூகோபாங்க்கிற்கும் எனது நன்றி.

UCO/CAS-69/80 TAM



**யுனைடெட் கமர்ஷியல் பாங்க்**

**உங்கள் அருகாமையில் உள்ள வசதியான பாங்க்**



# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி'
நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி

---

பணக்காரன் எவ்வளவுதான் பணம் வைத்திருந்தாலும் விருந்தினரை உபசரிக்கா விட்டால் அவன் ஏழைதான். அவன் அறிவற்றவன் எனவே கருதப்படுவான். இதனையே வள்ளுவர்.

**உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா**
**மடமை மடவார்கண் உண்டு.**

எனக் கூறினர். இதனால் விருந்திட்டு உபசரிப்பதன் மேன்மையை நாம் உணர்ந்து விருந்தினரை வழிபடுவதை நம் இயல்பாக்கிக் கொள்வோமாக.

ஒருவனுக்கு எதையாவது தானம் கொடுத்தால் அவன் நம் மீது நல்லெண்ணம் கொண்டு நம்பிக்கை அடைகிறன் என்பதைத்தான் கீழ் காணும் சம்ஸ்கிருத சுலோகம் எடுத்துக் காட்டுகிரது.

**வஸ்ய தானஸ்ய மாஹாத்மியம் ஈத்யப்பிரத்யய காரணம்.**
**யத்ர பாவாதபித்வேஷீ மித்ரதாம் யாதி தத்க்ஷணாத்.**

தானம் பெற்றால் எதிரியும் நண்பனுவான் என்ற இக்கருத்தை ஏற்போமாக.

---

மதிமுகம்: 67 நவம்பர் 1980 புன்னகை: 5

---

தனிப் பிரதி: ரூ. 1-50 வருட சந்தா: ரூ. 18-00






**எம். எஸ். ஜெயின், ஷிமோகா (கர்நாடகம்)**

கேள்வி : பிரளயம் வந்தால் உலகம் முழுவதும் நீரில் மூழ்கி விடு மாமே. அவ்வளவு நீர் எங்கே இருக்கிறது?

பதில் : பிரளயம் வந்ததென நாம் புராணக் கதைகளில் தான் படிக்கிறோம். வரலாற்று அடிப்படையில் அவ்வாறு பிரளயம் வந்ததாகத் எவ்விதச் சான்றும் இல்லை. எனவே பிரளயம் ஏற்பட்டு ஏராளமான நீர்பூமிப் பகுதிக்குள் புகுந்து எல்லாவற்றையும் அழித்து விட்டது என்பது உண்மையல்ல. இதற்குச் சரியான ஆதாரம் இல்லை. வட, துருவ, தென்துருவப் பகுதிகளிலுள்ள பனிமலைகள் உருகினால் உலகம் முழுவதும் நிரம்பும் நீர் கிடைக்கும்.

**எஸ். சுரேஷ், ஆலப்புழை (கேரளம்)**

கேள்வி : அணு குண்டு வெடிப்பதால் ஏற்படும் விளைவுகள் யாவை?

பதில் : அணு குண்டு வெடிக்கும் போது அதிலிருந்து ராட்சஸ சக்தி வெளிப் படுகிறது. மிக உஷ்ணமான பொருள்கள் அதிலிருந்து வெளிப்படுவதோடு மிகச் சூடான ஒளிக்கிரணங்களும் வெளிப்படுகின்றன. அந்த வெப்பத்தில் அதன் எதிரி லுள்ள எந்தப் பொருளும் கருகி விடும். உஷ்ணமான ஒளிக் கதிர்கள் எந்த உயி ரினத்தையும் கருப்பாக்கி விடும். சற்றுத் தொலைவில் இருப்பவர்கள் இதன் 'ரேடி யேஷ'னால் பல நோய்களுக்கு ஆளாகிறார்கள். பல பயங்கர நோய்களும் பொருட் சேதமும் உயிர்ச் சேதமும் ஏற்படுவதோடு இப்பகுதியில் பிறக்கும் குழந்தைகளும் பல அங்கங்கள் குறைந்தவர்களாகப் பிறக்கிறார்கள். பலவித நோய்களையும் உடையவர்களாக இருக்கலாம்.

இந்த அணு குண்டு வெடிப்பால் முழுக்க முழுக்க இந்த அனுபவங்களைப் பெற்றவை ஜப்பானிலுள்ள ஹிரோஷிமா-வும் நாகசாகி நகரமும் ஆகும். முத லாவது அணு குண்டு இங்கே விழுந்தது ஆனால் இன்றோ அந்த அணு குண்டை விடச் சக்தி வாய்ந்த அணுக் குண்டுகள் தயாரிக்கப் பட்டுள்ளன. இவற்றின் விளைவும் மிகக் கடுமையானதே.




கோட்டையை எதிரிகள் முற்றுகை இட்டால் தக்க ஏற்பாடுகளைச் செய்து வைத்திருக்குமாறு தன் சேனாபதியிடம் இரண்யகர்ப்பன் கூறவே அவனும் கோட்டையின் பாதுகாப்பிற்கு ஏற்பாடு செய்தும் உணவு தானியங்களைச் சேர்த்தும் வைத்தான்.

இதே சமயம் சிங்களத் தீவின் மன்னனான மேகவர்ணன் என்ற காகம் தன் ஆட்களுடன் இரண்யகர்ப்பனைக் காண வந்தான். மந்திரி சர்வக்ஞன் ''இவனோ நிலப் பட்சி. சித்திரவர்ணனின் நண்பனாக இருப்பவன். இவனை நண்பனாக வரவேற்பதா விரோதியாகக் கருதுவதா அல்லது நடுநிலைமை வகிப்பனாக நினைப்பதா? எப்படிப்பட்ட மரியாதையை நாம் இவனுக்கு அளிக்க வேண்டும்?'' என்று கேட்டான்.

ஹிரண்யகர்ப்பனும் ''அவன் தன் பரிவாரங்களுடன் வந்திருப்பதால் நண்பனாகக் கருதி வரவேற்போம். இத்துடன் சித்திரவர்ணனின் தூதனான கிளியையும் தர்பாருக்கு அழைத்து வாருங்கள்'' என்றான்.

சர்வக்ஞனும் ''சரி. எதற்கும் எச்சரிக்கையாக இவர்களுக்குச் சற்று தூரம் தள்ளியே நீங்கள் இருக்க வேண்டும். ஏனெனில் சாணக்கியன் அனுப்பிய தூதன் நந்தனை கொன்றது போல இவர்கள் உங்களைக் கொல்ல முயலலாம். உங்களுக்கும் அவர்களுக்கும் நடுவே உங்கள் மெய்காவலர்கள் கண் கொட்டாமல் நின்று காவல் புரியட்டும்'' என்றான்.

சபைக்கு சிங்கள மன்னன் மேகவர்ணனும் சித்திரவர்ணனின் தூதனான கிளியும் அழைத்து வரப்



கொண்டு ''இந்தக் கிளிக்கு இவ்வளவு ஆணவமா? இதனைப் பிடித்து இப்போதே கொல்லுங்கள்'' என்று கட்டளை இட்டான். அப்போது மேகவர்ணன் ''அரசே. இந்தக் கயவனை இப்போதே நான் கொல்ல அனுமதி கொடுங்கள்'' என்று கூறினான்.

அப்போது சர்வக்ஞன் ''மன்னா! இவன் ஒரு அரசனின் தூதன். அவன் சொல்லி அனுப்பியதையே சொன்னான். தூதனைக் கொல்லக் கூடாது. இது தான் விதி. அதனால் தான் தூதர்கள் துணிந்து சொல்ல வேண்டியதைச் சொல்கிறார்கள். அவர்கள் தாமாக எதையும் சொல்வதில்லை. அந்தந்த அரசர்கள் சொல்லி அனுப்பியதையே கூறுகிறார்கள். எனவே இவனை ஒன்றும் செய்யாது இங்கிருந்து போக விடுங்கள்" என்றான்.

ஹிரண்யகர்ப்பனும் கிளி அதன் நாட்டிற்குப் போகும்படிக் கூறி அனுப்பினான். அப்போது சர்வக்ஞன் ஹிரண்யகர்ப்பனிடம் கூறி முறைப்படி அதற்கு அளிக்கவேண்டிய பரிசுகளை அளிக்கச் செய்தான்.

கிளி சித்திரவர்ணனிடம் போய் ''அரசே. போருக்கான ஆயத்தம் செய்யுங்கள். கர்ப்பூரதேசம் சொர்க்கலோகம் போல இருக்கிறது அதன் படை பலமும் மிக அதிகம்'' என்றது,

பட்டார்கள். கிளி பணிவுடன் ஹிரண்யகர்ப்பனை வணங்கித் தனக்கு அளிக்கப்பட்ட ஆசனத்தில் அமர்ந்து தனது செய்தியைக் கூறியது ''ஹிரண்யகர்ப்பா! நீ உன் உயிரைக் காத்துக் கொள்ள வேண்டுமானாலோ இந்த நாட்டை விட்டு ஓட நினைக்காமல் இருந்தாலோ ராஜாதி ராஜரும் மகா பராக்கிரமசாலியுமான எங்கள் சித்திரவர்ணனின் முன் உடனே போய் மண்டியிட்டு வணங்கி நீ அவரது சிற்றரசன் எனக் கூற வேண்டும். இதுவே எம் அரசர் உன்னிடம் சொல்லச் சொன்ன செய்தி'' கிளி இவ்வாறு சொன்னதுமே ஹிரண்யகர்ப்பன் கோபம்



சித்திரவர்ணன் தன் மந்திரியான தூரதர்சியிடம் யோசனை கேட்டான். கழுகான தீர்க்கதரிசியும் ''போர் சுமத்தப்பட்டால் போர் புரியத்தான் வேண்டும். அப்போதும் நம் பலத்தையும் எதிரிகளின் பலத்தையும் கணக்கிட்டுப் பார்க்க வேண்டும் போரைத் தவிர்க்க சமாதான முறைகளைக் கையாள வேண்டும். அவசரப் பட்டு போர் புரியப் போகக் கூடாது'' என்றது.

சித்திரவர்ணனோ ''நீங்கள் இப்படித்தான் சொல்லிக் கொண்டே இருப்பீர்கள். நாம் இப்போதே படை எடுத்துச் செல்வோம்'' எனக் கூறி ஒரு நல்ல வேளை பார்த்துப் படைகளோடு கிளம்பினான். சித்திரவர்ணன் படை எடுத்து வருவது ஒற்றர்கள் வாயிலாக முன் கூட்டியே ஹிரண்யகர்ப்பனுக்குத் தெரிந்து விட்டது. சித்திரவர்ணனின் ஒற்றன் யாரோ தன் கோட்டையில் இருப்பதுவும் அவனுக்குத் தெரிந்து விட்டது. எனவே அவனைத் தேடிக் கண்டு பிடிக்க உத்தரவிட்டான்.

சர்வக்ஞன் மேகவர்ணனைச் சந்தேகிக்கலானான். ஹிரண்யகர்ப்பனோ அப்படி இராது எனக் கூறினான். ஆனால் சர்வக்ஞன் ''எதற்கும் எச்சரிக்கையாக இருப்போம். அது நம் இனப்பறவையான நீர்ப் பறவை அல்ல. நில இனப் பறவை'' என்றான்.

ஹிரண்யகர்ப்பனும் ''இப்போது என்ன செய்யவேண்டும்? எதிரி படை எடுத்து வருகிறான். அவனுக்கு இப்பகுதியிலுள்ள மலைகளையும் நதிகளையும் பற்றி எதுவும் தெரியாது. எனவே அவனைத் தாக்க இதுவே சரியான சமயம்'' என்றான்.

அவ்வாறே அவனது சேனாதிபதியும் சித்திரவர்ணனின் படைகளை மறைந்து மலைகளிலும் பள்ளத் தாக்குகளிலும் தாக்கிப் பெரும் பகுதியை அழித்து விட்டான்.

தன் படையில் பெரும் பகுதி அழிந்தது கண்டு சித்திரவர்ணன்

தூரதர்சியிடம் என்ன செய்வது என்று யோசனை கேட்டான். தூரதர்சியும் ''நான் கூறியதை முதலில் கேளாமல் அவசரப்பட்டு நீங்கள் போருக்குக் கிளம்பினீர்கள். இப்போது அடைந்த நஷ்டத்தைப் பார்த்தீர்களா? சரி. மனம் இடிந்து சோர்ந்து போய் விடவேண்டாம். நம் படையை ஒன்று திரட்டிக் கோட்டையைத் தாக்கலாம்'' என்றது. சித்திரவர்ணனும் இதன்படியே செய்தான்.

ஒற்றனாகச் சென்ற கொக்கு கொண்டு வந்த தகவலைக் கேட்டு தூரதர்சி ஹிரண்யகர்ப்பனிடம் போய் ''கோட்டையை பலப்படுத்துங்கள். இப்போது பணத்தை பணம் என்று பாராமல் வீரர்களுக்கு அள்ளிக் கொடுங்கள். அப்போது தான் அவர்கள் எதிரிகளை எதிர்த்துப் போராடி விரட்டுவார்கள்'' என்றான்.

அப்போது மேகவர்ணன் "நான் போய் சித்திரவர்ணனிடம் சமாதானப் பேச்சு வார்த்தைகளைத் துவக்கட்டுமா?'' என்றது. சர்வக்ஞனோ ''யாரும் கோட்டையை விட்டு வெளியே போகவேண்டாம் கோட்டையைக் காக்க உள்ளே நாம் ஏற்பாடுகளைச் செய்வோம்'' என்று கூறி விட்டான்.

சித்திரவர்ணனின் படைகள் ஹிரண்யகர்ப்பனின் கோட்டையை முற்றுகையிட்டன. நான்கு வாசல்களின் வெளியே கடும் போர் நிகழ்ந்தது. இப்படி ஹிரண்யகர்ப்பனின் வீரர்கள் போரிடும் போது மேகவர்ணனும் அவனது ஆட்களும் கோட்டைக்குள் பல வீட்டுக் கூரைகளின் மீது எரியும் கட்டைகளைப் போட்டு விட்டு ''ஐயோ! நெருப்பு!! நெருப்பு!! எங்கும் பற்றி எரிகிறதே. ஓடுங்கள் ஓடுங்கள்! கோட்டை போயிற்று எதிரிகள் உள்ளே வந்து விட்டார்கள் உயிர் தப்பி ஓடுங்கள்'' என்று உரக்கக் கத்தின.






## 6

[நாலு கண்ணனைப் பார்த்த சேனாதிபதி சமரசேனன் அவன் கண்ணிலும் ஒற்றைக் கண்ணன் கண்ணிலும் படாமல் தப்பி ஓடினான். அப்போது ஒரு எரிமலை வெடித்து நெருப்பையும் புகையையும் கக்கியது. அதனால் அவர்கள் வந்த வழியிலேயே திரும்ப வேண்டியதாயிற்று. அப்போது—]

எரிமலையிலிருந்து கிளம்பிய புகை நாலாபுறமும் பரவி பார்வையில் எதுவும் படாமல் செய்து விட்டது. எரிமலைவாயிலிருந்து வழிந்த நெருப்புக் குழம்போ அப் பகுதியை தகிக்கலாயிற்று. சமரசேனனும் அவனது வீரர்களும் தாம் வந்த வழியே திரும்பிப் போய் வேறு ஏதாவது வழி செய்து கொண்டு கிழக்கு திசையில் உள்ள தம் கப்பலை அடையத் தீர்மானித்துக் கொண்டார்கள்.

சமரசேனன் தன் வீரர்களை அழைத்துக் கொண்டு வந்த வழியே திரும்பினான். அவனது பயம் எல்லாம் மறுபடியும் மந்திரவாதிகளான நாலு கண்ணனிடமும் ஒற்றைக் கண்ணனிடமும் அகப்பட்டுக் கொள்ளாமல்



இருக்க வேண்டுமே என்பது தான். சமரசேனன் அப்போது மேற்கு நோக்கிப் போய்க் கொண்டிருந்தான். ஏனெனில் அவனால் கிழக்கே தொடர்ந்து செல்ல முடியவில்லை. அதற்குக் காரணம் எரிமலை நெருப்பையும் புகையையும் கக்கி அவர்களது வழியை மறைத்தது. அதனால் வந்த வழியே திரும்ப வேண்டியதாயிற்று. அது அவர்களது கப்பல் இருக்கும் இடத்திற்கு நேர் எதிரான திசையாகும்.

அப்போதும் கூட சமரசேனன் அடர்ந்து வளர்ந்த செடிகொடிகளை வெட்டித் தள்ளியவாறே வழி செய்து கொண்டு தான் போக வேண்டி இருந்தது. அவன் மற்ற வீரர்களுக்கு வழிகாட்டிக் கொண்டு வேக வேகமாகச் செல்லலானான். ஏனெனில் எரிமலைக்கும் நெருப்புக் குழம்பு அவர்கள் இருக்கும் பகுதியையும் எட்டலாயிற்று.

எரிமலை வெடிப்பால் அப்பகுதியில் உள்ள காட்டு மிருகங்களும் பயங்கரமாகக் கத்திக் கொண்டு ஓடி வரலாயின. அவற்றால் வேறு ஆபத்து நேரிடலாமே என வேறு பயந்து கொண்டே சமரசேனன் தன் வீரர்களுடன் ஓடலானான். அவன் எப்படியாவது சட்டென உயரமான ஒரு பகுதிக்குப் போய் விட வேண்டும் என்றே அப்படி ஓடினான். அப்போதுதான் சுற்றிலும் உள்ள நிலை அமைப்பைப் பற்றி அறிந்து கொண்டு வழி செய்துகொண்டு கப்பல் உள்ள இடத்திற்குப் போய்ச் சேர முடியும்.

சமரசேனன் தன் வீரர்களுக்கு உற்சாகமூட்டியவாறே முன் சென்று கொண்டிருந்தான். ஆனால் சட்டென அவன் ஓரிடத்தில் நின்றான். ஏனெனில் அவன் கண்ட அதிசயக் காட்சி அவனை அப்படி நிற்க வைத்தது. சற்று தூரத்தில் ஒரு மனிதன் காட்டுக் கொடிகளால் கட்டப்பட்டுத்

தலை கீழாகத் தொங்க விடப் பட்டிருந்தான். அவனை பார்த் தால் காட்டில் வாழும் வேடன் போல இருந்தது.

சமரசேனன் ''யார் இவனை இப்படிக் கட்டிப் போட்டார் களோ? எந்த காரணத்திற்காகக் கட்டிப் போட்டார்களோ? இவ னுக்கும் அவர்களுக்கும் ஏதாவது காரணத்தால் விரோதம் ஏற்பட் டிருக்க வேண்டும். அதனுல் தான் கட்டிப் போட்டிருக்கிருர்கள் ஆனுல் ஒன்றும் மட்டும் நிச்சயம். இங்கு அருகில் எங்கோ சில கான கவாசிகள் வாழ்கிருர்கள் என்பது தெரிகிறது. நாம் அவர்கள் இருக் கும் இடத்தைக் கண்டு பிடித்தால் அவர்களது உதவியைக் கொண்டு கிழக்குக் கடற்கரையிலுள்ள நம் கப்பலுக்குப் போக வழியைத் தெரிந்து கொள்ள முடியும்'' என்றுன்.

அப்போது ஒரு வீரன் ''அதற்கு அவர்கள் இருக்கும் இடத்தைத் தேடி ஏன் போக வேண்டும்? இந்த மனிதனின் கட்டுகளை அவிழ்த்து விடுவித்து இவனி டமே கேட்டுத் தெரிந்துகொள் ளலாமே'' என்றுன்.

சமரசேனனும் சிரித்தவாறே ''நானும் முதலில் அப்படித்தான் நினைத்தேன். ஆனுல் இவனை நன் ருகப் பார்த்ததில் இவனது





உடலில் **உயிர் இல்லை என்பது** தெரிந்து விட்டது. எங்கேயாவது உயிரற்ற உடல் பேசுமா?'' என்றான்.

அது கேட்டு மற்ற வீரர்கள் ''அடபாவமே' இவனைக் கட்டிப் போட்டு ஆகாரம் எதுவும் கொடுக்காமல் பட்டினி போட்டு யாரோ கொன்றிருக்கிறார்கள்.'' என்றார்கள். சமரசேனனும் யோசித்தவாறே சுற்றிலும் பார்த்தான். சற்று தூரத்தில் உலர்ந்த சுரைக் குடுக்கை ஒன்று கிடந்தது. அதன் வாய் திறந்தும் கழுத்து போன்ற இடத்தில் கயறு கட்டப்பட்டும் இருந்தது. கானகவாசி அதில் தண்ணீர் எடுத்துக் கொண்டு வந்து குடிப்பதற்காக வைத்துக் கொண்டு இருந்திருக்க வேண்டும்.

சமரசேனன் அந்தக் குடுக்கையை எடுத்துப் பார்த்தான். பிறகு அவன் ''சரி, சரி. நாம் எப்படியாவது இங்கு கானகவாசிகள் வசிக்கும் இடத்தைக் கண்டு பிடித்து விடலாம். இப்போது வழி தெரியாமல் என்ன செய்வது என்று திண்டாடிக் கொண்டிருக்கிறோம். கிழக்கே சென்ற நாம் மேற்கே செல்லும் படியான நிலைக்குத் தள்ளப்பட்டோம். இந்த இக்கட்டான நிலையில் இப்படி ஒரு உதவியை நம் குந்தளதேவி தான் நமக்குச் செய்திருக்கிறாள். இனி கவலைப்படாதீர்கள். நமக்கு ஆபத்து இனி வராது'' என்றான்.

பிறகு சுற்றிலும் பார்க்கவே பல மனிதர்களின் கால் சுவடுகள் தரைமீது பதிந்திருப்பதை அவன் கண்டான். அவன் மகிழ்ந்து போய் ''இதோ இங்கு பல மனிதர்கள் நடமாடி இருப்பது தெரிகிறது. அவர்கள்தான் இந்தக் கானக வாசியை என்ன காரணத்திற்காகவோ கட்டிப் போட்டு விட்டுப் போயிருக்க வேண்டும். அவர்கள் இவனது ஏதோ ஒரு தகாத செயலுக்கு இத்தகைய தண்டனையை

விதித்திருக்கலாம்'' என்ருன். பின்னர் ஏதாவது உயரமான இடம் இருக்கிறதா என அரை மணி நேரம் சுற்றிப் பார்த்த பின் ஒரு உயரமான இடத்தை அடைந்தார்கள். அங்கிருந்து பார்த்த போது அப்போதும் எரிமலையின் குமறல் அடங்கா தததை அவர்கள் கண்டார்கள். காட்டில் பல இடங்களில் தீ மூண்டு எரிவதையும் காட்டு மிருகங்கள் பயங்கரமாகக் கத்தி ஓடுவதையும் அவர்கள் கண்டார்கள்.

சற்று தூரத்தில் ஒரு ஆறு ஓடிக் கொண்டிருந்தது. அதைக் கடந்து சென்ருல் எரிமலையின் தகிப்பிலிருந்து தப்பலாம். நதியில் பல பாறைகள் தென்பட்டதால் அதனைக் கடப்பது எளிது என்பதை சமரசேனன் கண்டான். உடனே தன் வீரர்களோடு நதிக்கரையை அடைந்தான்.

நதியைக் கடக்கப் பாறைக்குப் பாறை கயறு கட்டிஞல்போதும் அதைப் பிடித்துக் கொண்டே ஆற்று நீரில் இறங்கி வெள்ளத்தில் அடித்துச் செல்லப் படாமல் பாறைக்குப் பாறையாக பத்திரமாகக் நடந்து போய் அந்த ஆற்றைக் கடந்து விடலாம். இதை சமரசேனன் கூறிக் காட்டுக் கொடிகளை கொண்டு உறுதியும்




நீளமானதும் பருமனுனதுமான கயறு தயாரிக்கச் சொன்ஞன். வீரர்களும் அவ்வாறே செய்யவே அதனைப் பாறைக்குப் பாறையாக அந்த ஆற்றில் கட்டி அதனைப் பிடித்துக் கொண்டு நதியைக் கடந்து அவர்கள் எல்லோரும் எதிர்க்கரையை அடைந்து விட்டார்கள். அவர்கள் அங்கிருந்து சென்று அடர்ந்து மரங்கள் வளர்ந்துள்ள பகுதியை அடைந்தார்கள்.

அப்போது திடீரென யானைகள் பிளிறிடும் சத்தம் கேட்டது. அதைக் கேட்டு வீரர்கள் திகைத்து நின்ருர்கள். சமரசேனனே அவர்களை பயப்பட வேண்டாம் என்று கூறிவிட்டுச்

சுற்றிலும் பார்க்கலானுன். எது வும் தெரியாததால் ஒரு மரத் தின் மீது ஏறிச் சுற்றிலும் பார்க்கலானுன். மற்ற வீரர்களும் மரத்தின் மீது ஏறிப் பார்க்க லானுர்கள்.

அவர்கள் அப்படி ஏறியதே நல்லதாகப் போயிற்று. ஏனெ னில் சற்று நேரத்திற்கெல்லாம் யானைகளின் கூட்டம் ஒன்று வேகமாக அங்கு ஓடிவந்தது. அதைக் கண்டு சமரசேனனும் மற்ற வீரர்களும் பயப்பட்டார் கள். ஏனெனில் அவை வந்த வேகத்தைப் பார்த்தால் அவர் கள் ஏறி இருந்த மரங்களை எல்லாம் வேரோடு பிடுங்கி எறிந்து விடுமோ என்ற பயம் அவர்களுக்கு ஏற்பட்டது.

எல்லோரும் கிளைகளில் நன்கு மறைந்து கொண்டார்கள். நல்ல வேளையாகச் சட்டென மரங்க ளின் மீது ஏறியதால் அவர்கள் யானைகளின் காலடியில் சிக்கி மிதி படாமல் தப்பினுர்கள். சற்றுத் தாமத்திருந்தால் அவர் கள் கதி என்ன ஆகி இருக்கும்? யானைகள் அவர்களை மிதித்து நசுக்கி உருத்தெரியாமல் செய்து விட்டுப் போயிருக்கும். நல்ல வேளை! அதிர்ஷ்டம் அவர்கள் பக்கம் இருந்தது. அந்த யானைக் கூட்டம் அவர்களையும் பார்க்க



வில்லை. அப்பகுதியிலிருந்து மெது வாகச் சென்றன. எல்லா யானை களும் சென்ற பிறகும் கூட அவர் கள் மரங்களிலிருந்து உடனே இறங்கி விடவில்லை. ஏனெனில் யானைகள் திடீரென்று திரும்பி வந்து விட்டால் என்ன செய்வது என்ற பயமே அவர்களை மரத்தின் மீதே உட்கார்ந்திருக்கச் செய் தது. அவர்கள் சற்று நேரம் கழித்து ஆபத்து எதுவும் இனி வராது என்று உறுதி செய்து கொண்ட பிறகே கீழே இறங்கி வந்தார்கள்.

இப்போது அவர்களுக்கு எங்கே போவது என்று தெரிய வில்லை. அவர்கள் போக விரும்

பியது கானகவாசிகள் வாழும் பகுதிக்கு. அவர்களது கால்ச் சுவடுகள் இருக்குமா என்று அவர்கள் தேடிப் பார்கலாஞர் கள். ஆனுல் அந்த முயற்சி வீணுகியது. ஏனெனில் சற்று முன் வந்த யானைக் கூட்டம் அப்பகுதியை மிதித்து விட்ட தால் யானைக் கால்களின் சுவடு கள் தாம் தெரிந்தன. மனிதர் கால்ச் சுவடு ஒன்று கூட அவர் கள் கண்ணில் படவில்லை.

சமரசேனன் தன் வீரர்களைப் பார்த்து ''நாம் நம் கப்பலை அடைய இங்கு வசிக்கும் கானக வாசிகளைத் தேடிப் பிடித்து அவர்களது உதவியை நாட முயன்ருேம். ஆனுல் இப்போது திடீரென இங்கு யானைகள்வந்து நாம் முன்பு பார்த்த மனிதர் களின் கால்ச் சுவடுகளை எல் லாம் அழித்து விட்டுப் போய் விட்டன. அந்தக் கானகவாசி களை இனி எந்தத் தடயம் வைத்துக் கொண்டு தேடுவது? ஆனுலும் நாம் மனம் தளர்ந்து விட வேண்டாம். நம் குந்தள தேவியின் பரிபூரண அருள் நமக்கு இருக்கிறது. இதுவரை அதிர்ஷ்டம் நமக்குத் துணை புரிந்திருக்கிறது. எனவே இனி யும் நம் முயற்சியில் வெற்றியே பெறுவோம். கொஞ்சமும் மனம் தளர வேண்டாம். நாம் எதிர் பாராத விதத்தில் நமக்கு எப் படியாவது உதவி கிடைக்கும்'' என்று தன் வீரர்களிடம் கூறி விட்டுச் சுற்றிலும் ஒரு முறை பார்க்கலாஞன்.

வீரர்களுக்கும் சமரசேனன் கூறியதில் நம்பிக்கை ஏற்பட்டது. ஏனெனில் இதுவரை அவன் அவர் களுக்கு வந்த ஆபத்துக்களை எல் லாம் சமாளித்துத் தப்பி வந்திருக் கிருன். இப்போது மட்டும் அப் படி நடக்காமல் தப்பாமலா இருந்து விட முடியும்?

(தொடரும்)





# நியாயமா அது?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளிநகைத்து ''மன்னனே! நீ இப்படிச் செய்வது நியாயமா, இல்லையா என்று யோசித்துப் பார்ப்பது வீண். இதில் வெற்றி கிடைக்கிறதா என்பதே முக்கியம். இதை விளக்கக் கேசரிவர்மன் என்ற மன்னனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

மணிபுர மன்னன் கஜபுர மன்னனின் சிற்றரசன். மணிபுரம் சிறிய நாடாயினும் வளமிகுந்தது. செழிப்பான வயல்

## வேதாளம் சொல்லும் கதை



களையும் தாதுப் பொருள்களையும் கொண்டு அந்த நாடு செல்வம் நிறைந்ததாக இருந்தது. எனவே கஜபுர மன்னன் அதனைப் பாது காத்தும் அதன் முன்னேற்றத்திற்கும் பெரிதும் உதவி வந்தான்.

இந்தச் செழிப்பான மணிபுரத்தின் மீது வீரபுர மன்னன் ஒரு கண் வைத்திருந்தான். ஒரு நாள் திடீரெனப் படை எடுத்து வந்து அதனைக் கைப்பற்றியும் விட்டான். இதைக் கண்ட கஜபுர மன்னன் திகைத்தான். மணிபுரத்தைக் காப்பது தன் கடமை எனக் கருதினாலும் வீரபுர மன்னனை எதிர்க்கும் அளவிற்கு அவனிடம் படை இல்லை. எனவே தன் அமைச்சரின் யோசனையி[ன்] பேரில் சிங்கபுர மன்னனான கேச[ரி]வர்மனின் உதவியை நாடினான். கேசரிவர்மன் கஜபுர மன்னனி[ன்] நெடுநாளைய நண்பன். நேர்மை[]யானவன். அநியாய வழிக்கு[ப்] போகாதவன் என்று பெய[ர்] பெற்றவன். எனவே அவ[ன்] கஜபுர மன்னனுக்கு உதவுவ[து] தன் கடமை எனக் கருதித் த[ன்] படையோடு கஜபுரத்திற்கு வ[ந்] தான். இரு படைகளும் சேர்ந்[து] வீரபுரத்தைத் தாக்கின.

கடும் போர் நிகழ்ந்தது. முத[ல்] நாள் போர் முடிந்ததும் வீரபுர[த்] திற்கே வெற்றி ஏற்படும்போ[ல்] இருந்தது. இதைக் கண்ட கேச[ரி]வர்மன் என்ன செய்வதென[] யோசிக்கலானான். அப்போ[து] கஜபுர மன்னன் சிங்கபுர ம[ன்]னனிடம் ஒரு தந்திர வழியை[க்] கூறி வெற்றி பெற திட்டம் வகு[த்]தான். கேசரிவர்மனும் அதன்ப[டி] நடப்பதாகக் கூறி வீரபுர மன்[ன]னோடு சமாதான உடன்படிக்[கை] செய்து கொண்டு தன் படைக[ளை] அழைத்துக் கொண்டு சென்றான்[.]

வீரபுரப் படைகள் அன்றிர[வு] கவலையற்று வெற்றிவிழாக்கொண்[]டாடி குடித்துக் கும்மாள[ம்] போட்டுக் கொண்டிருந்தபோ[து] தன் படைகளை அழைத்துச் சென்[ற] கேசரிவர்மன் திரும்பி வந்தான்[.]

அவன் தன் படைகளோடு கஜபுரப் படைகளைச் சேர்த்துக் கொண்டு வந்து வீரபுரப் படைகளைத் தாக்கினான். அதில் வீரபுர வீரர்கள் பலர் மடிய வீரபுர மன்னனும் சிறைப் பட்டான்.

மணிபுரம் விடுதலை அடைந்தது. கஜபுர மன்னன் கேசரி வர்மனுக்குத் தன் நன்றியைத் தெரிவித்தான். அவனும் தன் படைகளோடு தன் நாட்டிற்குத் திரும்பினான்.

வேதாளம் இக் கதையைக் கூறி ''மன்னனே! கேசரி வர்மன் நேர்மையானவன். நியாய வழியில் செல்பவன். அவன் வீரபுர மன்னனைத் தாக்கிய விதம் சரியா? அநியாயமானதா இக் கேள்விகளுக்குச் சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''கேசரி வர்மன் மணிபுரத்தைக் காப்பது தன் கடமை எனக் கருதினான். ஏனெனில் கஜபுர மன்னன் அவனது நண்பன் மணிபுர மன்னன் கஜபுர மன்னனின் சிற்றரசன். எனவே கேசரிவர்மன் மணிபுரத்தைக் காப்பாற்றித் தன் நண்பனுக்கு உதவவே வந்தான். அது நியாயமானதே. போரில் வெற்றி பெற அதற்கான வழி செய்யவேண்டும். தன் கடமையைச் செய்யாவிட்டால் அது அநியாயமே எனக் கருதியதாலே வெற்றிபெற கஜபுர மன்னன் கூறிய யோசனையைச் சரியெனக் கேசரிவர்மன் ஏற்றான். அதன்படி பின் வாங்குவது போலப் போய் பிறகு தாக்கினான். எனவே அவன் செய்தது சரியே. அநியாயம் அல்ல'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# ஏன் தானம்?

ஒரு முறை காட்டில் வேட்டையாடப் போன ஒரு மன்னன் தன் ஆப ரணங்களை எல்லாம் கழற்றி ஒரு முனிவரின் ஆசிரமத்தில் வைத்து விட்டுச் சென்றான். அதை அறிந்த இரண்டு திருடர்கள் அந்த ஆசிரமத்திற்கு வந்தார்கள். அவர்களைப் பார்த்ததுமே அவர்களது நோக்கத்தை அறிந்து கொண்ட முனிவர் அரசனின் ஆபரணங்களை எடுத்துக் கொடுத்து ''கொண்டு செல்லுங்கள்'' என்றார்.

அதைக் கண்டு அத்திருடர்கள் திகைத்துப் போனார்கள். முனிவர் அப்போது ''திருடுவது பெரும் பாவம். நீங்கள் அந்தப் பாவத்தைச் செய்யக் கூடாது என்பதற்காக இதனை நான் தானம் செய்தேன். இப்போது இது திருட்டு சொத்தல்ல. இதை மட்டும் நீங்கள் திருடி இருந்தால் அரசன் உங்களைப் பிடித்து உங்கள் தலையை வெட்டி விடுவான். அரசனிடம் கூட நானே நகைகளை உங்களுக்குக் கொடுத்ததாகக் கூறி விடுகிறேன்'' என்றார். திருடர்கள் முனிவரை வணங்கி நகைகளை எடுத்துக் கொள்ளாமல் சென்று விட்டனர்.





# பொழுது போன விதம்!

ஒரு சத்திரத்து அறையில் மூன்று பேர்கள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். ஒருவன் ''பொழுது போக நம் அனுபவங்களைக் கூறலாம்'' என்ருன். மற்றவர்களும் சரி என்ருர்கள். மூவரும் தம் பெயர்களைக் கூறி தமக்குள் அறிமுகம் செய்து கொண்டார்கள். ஒருவன் பெயர் பசுபதி. மற்றவன் பெயர் கஜபதி. மூன்ருவதவன் பெயர் சேனுபதி.

பசுபதி தன் கதையை ஆரம்பித்தான் ''ஒரு நாள் ஒரு ஊருக்குப் போனேன். அங்கே ஒரே மழை. ஊர் எல்லையில் ஒரு பாழடைந்த வீட்டுத் திண்ணையில் படுத்துக் கொண்டேன். பொழுது போக என்ன செய்வதெனத் தெரியாமல் மெதுவாகப் பாடலானேன்.

அப்போது அந்த வழியே சென்ற ஒரு குதிரைவண்டி 'டக்' கென்று நின்றது. அதிலிருந்து ஒரு பணக்காரர் இறங்கி என்னருகே வந்து ''ஆகா! எவ்வளவு இனிமையாகப் பாடுகிறீர்கள்! என் குடும்பத்தவரை என் மாமஞர் வீட்டில் விட்டு விட்டு இப்போது நான் என் வீட்டிற்குத் திரும்பிக் கொண்டிருக்கிறேன். அங்கே போனுல் நான் தனியாகத்தான் இருக்க வேண்டும். நீங்கள் என்னேடு வாருங்கள். அங்கே நீங்கள் என் எதிரில் அமர்ந்து கொண்டு பாடினுல் எனக்கு பொழுது போகும்'' எனக் கூறி என் கையைப் பிடித்து அழைத்து தன் வண்டியில் ஏற்றிக் கொண்டார்.

வண்டியும் கிளம்பி அவரது ஊருக்குப் போய் அவரது வீட்டில்

உடுமலே உலகநாதன்



நின்றது. அன்றிரவு பனிரெண்டு மணி வரை நான் பாட அவர் ரசித்தார். பிறகு இருவரும் சாப்பிட்டுப் படுத்தோம். அவர் தூங்கிவிட்டார். நான் அங்கே இருந்த பணத்தை எல்லாம் மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டு இங்கே வந்தேன். இப்போது அந்த மூட்டையை கஜபதி எடுத்து வைத்திருக்கிறான். இவனும் என்னைப் போலத் திருடனே"

இவ்வாறு கூறி கஜபதி மடியில் மறைத்து வைத்திருந்த மூட்டையைப் பசுபதி பிடுங்கிக் கொண்டான்.

கஜபதியும் சிரித்தவாறே "சரி, நான் என் கதையைக் கூறுகிறேன்" என்று சொல்ல ஆரம்பித்தான். "முந்தாநாள் இரவு நல்ல மழை. அப்போது நான் ஒரு கிராமத்தில் இருந்தேன். அது எனக்கு முற்றிலும் புதிய ஊர். எங்கே தங்குவது என அலைந்து பார்த்தேன். யாரையும் காணவில்லை. ஒரு பணக்காரர் வீட்டுக் கொல்லைப்புறம் போனேன். அங்கே இருந்த ஒரு பெரிய வைக்கோல் போருக்குப் பின் ஒளிந்து கொண்டேன்.

பணக்காரரின் வயதான தாய் அப்போது பக்கத்து ஊரில் நடக்கும் கதாகாலட்சேபம் கேட்கப் போகவேண்டும் என்றாள். பணக்காரருக்கு அப்போது போக இஷ்டமில்லை. ஆனால் அவரது தாயார் போயே ஆகவேண்டும் என்வே அவர் தன் தாயையும் மனைவியையும் அழைத்துக் கொண்டு வீட்டைப் பூட்டிக் கொண்டு கிளம்பிச் சென்றார்.

நான் வீட்டின் பின்வழிக் கதவைச் சத்தமில்லாமல் திறந்து வீட்டிற்குள் போனேன். அங்கே இருந்த நகைகளையும் பணத்தையும் எடுத்து மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டு இந்த சத்திரத்திற்குச் சற்று முன் வந்தேன். அந்த மூட்டையை இந்த சேனுபதி என்னிடமிருந்து எடுத்து அந்த மூலையில் ஒளித்து வைத்

திருக்கிறான்'' இதைக் கூறி அந்த அறையின் ஒரு மூலைக்குப் போய் அந்த மூட்டையை எடுத்துக் கொண்டு கஜபதி வந்தான். சேனு பதியும் சிரித்து விட்டு ''சரி, என் கதையைச் சொல்கிறேன்'' எனச் சொல்ல ஆரம்பித்தான்.

''நான் நேற்று ஒரு ஊருக்குப் போனேன். என் கையில் ஒரு காசு கூட இல்லை. எங்காவது ஏதாவது கிடைக்குமா என்று வீடு வீடாகப் பார்க்கலானேன். அப்போது காற்றும் மழையும் அடித்ததால் ஒரு வீட்டுத்திண்ணை யில் ஏறி உட்கார்ந்தேன். உள்ளே பேச்சுக் குரல் கேட்கவே அதைக் கேட்கலானேன். ஒரு கணவனும் மனைவியும் பேசிக் கொண்டிருந் தார்கள். மனைவி கணவனிடம் ''இந்த மழையிலும் சீட்டாடப் போக வேண்டுமா? நான் மட்டும் வீட்டில் தனியாக இருக்கவேண் டுமா? நீங்கள் எப்போது வருவீர் களோ?'' என்றாள்.

கணவனோ ''போய் ஒரு ஆட் டம் ஆடி விட்டு அரை மணி நேரத் தில் வந்து வருகிறேன். எனக்காக மற்ற மூன்று பேர்களும் காத்துக் கொண்டிருப்பார்கள். நீ வாசல் கதவைத் தாழ்ப்பாள் கூட போட வேண்டாம். நீயோ அயர்ந்து தூங்கி விடுவாய். நான் வந்து தட்டினால் கூட உன் காதில் விழாது'' என்றான்.

மனைவியும் ''சரி, போய்விட்டு சீக்கிரம் வந்து விடுங்கள். நான்



கதவை தாழ்ப்பாள் போடாமல் மூடி வைத்திருக்கிறேன். நீங்கள் சொல்வது போல் நான் படுத்து விட்டால் எருமை மாடு போலத் தான் எதுவும் தெரியாமல் கிடப் பேன்'' என்று கூறி கணவனை அனுப்பி விட்டுக் கதவை சாத்திக் கொண்டாள்.

நான் மூலையில் ஒளிந்து அதைப் பார்த்தேன். கணவன் போன பின் மனைவி படுத்தாள். சற்று நேரத்தில் குறட்டை விட்டுத் தூங்கலானுள். மழை பலமாகப் பிடித்துக் கொண்டது. கணவனே சீட்டாட்டத்தில் மூழ்கிவிட்டான். நான் இதுதான் சமயம் என்று மெதுவாக வாசல் கதவைத் திறந்துகொண்டு உள்ளே போய் இருந்த வெள்ளிப் பாத்திரம், பணம் எல்லாம் எடுத்து மூட்டை யாகக் கட்டிக்கொண்டு வந்தேன். அந்த மூட்டையை இந்தப் பசுபதி எடுத்து சன்னல் பக்கம் மறைத்து வைத்திருக்கிறுன்.''

இவ்வாறு கூறி சேனுபதி அந்த மூட்டையை எடுத்து வந்தான். மூவரும் ''பேஷ். இப்போது நாம் யார் என்பதும் என்ன தொழில் செய்கிறேம் என்பதும் தெரிந்து விட்டது. இவ்வளவு நேரம் பேசிக் கொண்டிருந்ததால் பொழுதும் போயிற்று'' என்றுர்கள்.

அப்போது அந்த அறையின் கதவு சட்டென மூடப்பட்டு வெளியே பூட்டப்பட்டது. சன் னல் வழியாக அம் மூவரையும் பார்த்த ஒருவர் ''நான்தான் காவல் அதிகாரி. எனக்கும் நீங் கள் பேசியது கேட்டுப் பொழுதும் போயிற்று. திருட்டுக்களையும் கண்டுபிடித்தேன். காலை வரை இங்கேயே இருங்கள். பிறகு காவல் நிலையத்திற்கு அழைத்துப் போகிறேன்: அங்கே போய் நீங் கள் எல்லாம் கம்பி எண்ணலாம் அப்போது உங்களுக்கு இதை விட நன்றுப் பொழுது போகும்'' என்றுர் சிரித்தவாறே!







# உறவு எதற்கு?

அழகிரிக்குப் பட்டணத்தில் வேலை கிடைத்து விட்டது என்ற தகவல் வந்ததும் அவனது தாய் கமலம்மாவுக்கும் தம்பி தங்கப்பனுக்கும் தங்கை தங்கம்மாவிற்கும் ஒரே சந்தோஷமாகப் போய் விட்டது. ஏனென்றால் கமலம்மா தன் கணவன் இறந்த பின் ஒரு பணக்கார வீட்டில் சமையல் காரியாக வேலைக்கு அமர்ந்து தன் குழந்தைகளைக் காப்பாற்றி வந்தாள்.

அழகிரி நன்கு படித்து பட்டணத்திற்குப் போய் உலகநாதன் என்பவரின் உதவியால் மேல்ப் படிப்பு படித்து அரசாங்க வேலை ஒன்றையும் பெற்று விட்டான். இவ்வளவிற்கும் உலகநாதன் ஒன்றும் பணக்காரர் அல்ல. அவர் எல்லோருக்கும் உதவ முன் வருபவர். அவர் அழகிரியின் நிலையைக் கண்டு இரங்கி வாரத்தில் ஒரு நாள் தன் வீட்டில் சாப்பாடு போட்டும் மற்ற நாட்களில் வேறு சில வீடுகளில் சாப்பாடு கிடைக்கவும் ஏற்பாடும் செய்தார்.

வேலை கிடைத்ததும் அழகிரி ஒரு சிறு அறையில் வாடகைக்கு இருந்து தன் செலவுக்கு வேண்டியது போக மீதப்பணத்தைத் தன் தாய்க்கு மாதாமாதம் அனுப்பி வந்தான்.

அழகிரியின் பணம் வந்ததால் கமலம்மா தன் வீட்டில் பல மாறுதல்களைப் செய்து அழகு படுத்தினாள். அவள் சமையல் வேலையை விட்டுவிட்டாள். தங்கப்பனை நல்ல பள்ளிக்கூடத்தில் சேர்த்தாள். தங்கம்மாவிற்குப் பாட்டு சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்தாள்.

ஒரு முறை அழகிரி தன் தாயைப் பார்க்க வந்தபோது யாரோ ஒரு

சுதா சுவாமிநாதன்

பணக்கார அம்மாள் கூட இருப்பதையும் கண்டான்.

கமலம்மாவும் தன் மகனிடம் ''இவர்கள் பெரிய பணக்காரர்களாம். எனக்கு ஒன்று விட்ட அண்ணனின் மனைவி. உனக்குத் தன் மகளைக் கல்யாணம் செய்து வைக்கலாம் என்ற நோக்கத்தோடு வந்திருக்கிறார்'' என்றாள்.

உள்ளே போய் கைகால் அலம்பிக் கொண்டு வந்த அழகிரி சமையல் கட்டில் தன் தாய் மட்டும் இருப்பதைப் பார்த்து சற்று உரக்க ''அம்மா! இத்தனை நாட்களாக உன் ஒன்று விட்ட அண்ணன் மனைவி இந்த வீட்டுப் பக்கம் எட்டிக் கூடப் பார்த்ததே இல்லை. இப்போது தன் மகளை அவள் எனக்குக் கட்டி வைப்பதென்றால் அதன் நோக்கம் என் நல்ல நிலையைக் கண்டுதான். கல்யாணம் ஆனதும் என்னை உங்களிடமிருந்து பிரித்து விடுவார்கள். நமக்கு இப்படிப்பட்டவர்கள் சம்மந்தம் வேண்டாம் அம்மா'' என்றான்.

இதைக் கேட்ட கமலம்மாவின் உறவினள் அன்று மாலையே ஊருக்குக் கிளம்பிப் போய் விட்டாள்.

ஒரு முறை கமலம்மா தன் அண்ணனின் மகனின் கல்யாணத்திற்கு அழகிரியுடன் போனாள். கல்யாணம் ஆனதும் அழகிரி ஓரிடத்தில் இருவர் பேசுவது கேட்டு மெதுவாகத் தன் தாயாரையும் அழைத்து வந்து அவர்கள் பேசுவதையும் கேட்கச் சொன்னான்.



அப்படிப் பேசியவர்கள் கமலம் மாவின் அண்ணனும் அவனது மனைவியுமே.

மனைவி தன் கணவனிடம் ''உங்கள் தங்கை வந்திருக்கிறாளே. அவள் மகனை நம் மகளுக்குக் கேட்டுப் பார்க்கலாமே பையன் லட்சணமாக இருக்கிறான். கை நிறையச் சம்பாதிக்கிறான்'' என்றாள்.

கணவனோ ''அந்த சமையல் காரியின் மகனையா! சேச்சே! நம் அந்தஸ்திற்குத் தக்கபடி பார்க்கலாம்'' என்றான்.

அதைக் கேட்ட கமலம்மா திடுக்கிட்டாள். ஆனால் விழித்துக் கொண்டு விட்டாள். அது முதல் எந்த உறவினன் வந்து அழகிரிக் குப் பெண் கொடுப்பதாகக் கூறினாலும் அவள் ''அழகிரியின் கல்யாணம் இப்போதைக்கு இல்லை'' என்று சொல்லி அனுப்பி வந்தாள்.

ஒரு நாள் அழகிரி பட்டணத்திலிருந்து வந்து ''அம்மா! நம் தங்கம்மாவுக்கு ஒரு நல்ல இடமாக உலகநாதன் பார்த்துக் கொடுத்திருக்கிறார். வரதட்சணை இல்லை. எளிய முறையில் கல்யாணம் நடத்தினால் கூடப் போதும் என்று பிள்ளை வீட்டார் சொல்கிறார்கள். உலகநாதனும் இந்த சம்மந்தத்தை விட வேண்டாம் என்றும் கல்யாணம் செய்யப் பணம் இல்லாவிட்டால் அதற்கும்தான் ஏற்பாடு செய்வதாகவும் கூறுகிறார். நீ என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டான்.



கமலம்மாவும் ''சொல்வதற்கு என்ன இருக்கிறது! அந்த உலக நாதரைக் கோவிலில் வைத்துத் தான் கும்பிட வேண்டும். எவ்வளவு நல்லவர். எல்லோருக்கும் எப்படி உதவுகிறார்!'' என்றாள்.

அப்போது அழகிரி ''இப்படி நல்லவருக்குத்தான் இளம் வயதில் இளம் பிள்ளை வாதத்தால் சற்று ஒரு கால் குட்டையான மகள் இருக்கிறாள் பாவம்! அம்மா, நான் அவளைக் கல்யாணம் செய்து கொள்ளத் தீர்மானித்து விட்டேன். நொண்டி நடந்தால் என்ன? குணம் நல்ல குணம்'' என்றான்.

கமலம்மாவும் ''ஆகா. தாராளமாக. நானே வந்து அவரிடம் முறைப்படி பெண் கேட்கிறேன்'' என்றாள். பிறகு அவள் அழகிரியுடன் பட்டணம் போய் உலக நாதரிடம் பெண் கேட்கவே அவர் ''அம்மா! நன்கு யோசித்துப் பாருங்கள். உங்கள் மகன் உணர்ச்சி வசத்தால் ஏதோ சொல்லி விட்டான் என்பதற்காக இந்தக் கல்யாணத்தை நிச்சயம் செய்ய வேண்டாம்'' என்றார்.

கமலம்மாவும் ''அழகிரி தன் உறவினர்கள் தம் பெண்ணைக் கொடுக்க வந்தபோது வேண்டாம் எனக் கூறி விட்டான். ஏனென்றால் அவர்கள் அவனது பணத்திற்காக வந்தார்கள். அவனோ உங்களைப் போன்றவர்களையே உறவினராகவும் உயர்ந்தவராகவும் கருதுகிறான். அவன் விருப்பமே என் விருப்பமும் கூட. எனவே உங்கள் மகளை என் வீட்டு மருமகளாக மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறேன்'' என்றாள்.

ஒரு நல்ல முகூர்த்தத்தில் உலக நாதன் தேர்ந்தெடுத்த பையனுக்கும் தங்கம்மாவிற்கும் கல்யாணம் நடந்தது. அதற்குப் பின் அழகிரிக்கும் உலகநாதனின் மகளுக்கும் அழகிரி விரும்பியபடியே கல்யாணம் நன்கு நடைபெற்றது.





# திறமைசாலியே!

பிரம்மதத்தன் காசியை ஆண்ட காலத்தில் போதிசத்வர் வைசிய குலத்தில் பிறந்து 'வர்த்தக சிரோன்மணி' என்று அழைக்கப் பட்டார் அவர் நல்ல அறிவாளி. எல்லா சாஸ்திரங்களையும் நன்கு கற்று உணர்ந்தவர்.

ஒரு நாள் அவர் அரசசபைக்குப் போய்க் கொண்டிருக்கையில் வழியில் ஒரு செத்த எலியைக் கண்டு ''இதைக் கூட யாராவது திறமை மிக்க இளைஞன் எடுத்துப் போய்ப் பயன் படுத்தினால் அவன் கோடீஸ்வரனாகக் கூட ஆகலாம் எதற்கும் முயற்சிதான் தேவை'' எனச் சற்று உரக்கக் கூறியவாறே சென்றார்.

அதை ஆனந்தன் என்ற வாலிபன் கேட்டு விட்டான். அவன் போதிசத்வரை தெய்வத்தின் மறு அவதாரம் எனக் கருதியவன். எனவே அவரது வாக்கு பலிக்கும் என் எண்ணி அந்த செத்த எலியை எடுத்துக் கொண்டு கடைத் தெருவிற்குப் போனான். அதை ஒரு பூனைக்கு இரையாகக் கொடுக்க ஒரு கடைக்காரன் ஒரு செப்புப் பணம் கொடுத்து வாங்கிக் கொண்டான்.

ஆனந்தன் அந்தப் பணத்திற்கு வெல்லக் கட்டிகளை வாங்கினான். ஒரு பெரிய பானையில் நீர் நிரப்பி அதனையும் வெல்லக் கட்டிகளையும் எடுத்துக் கொண்டு அவன் ஓரிடத்தில் உட்கார்ந்தான். அவ்வழியே பூக்காரர்கள் பூப்பறித்துக் கொண்டு செல்வார்கள். அவர்கள் அன்று ஆனந்தனைக் கண்டு அவனிடம் வெல்லமும் நீரும் கேட்டு வாங்கிச் சாப்பிட்டார்கள். போகும் போது ஒவ்வொருவரும் கை நிறைய பூக்களை அள்ளி

ஜாதகக் கதை



எடுத்து அவனுக்குக் கொடுத்து விட்டுப் போனார்கள்.

ஆனந்தன் அந்தப் பூக்களை விற்று மேலும் வெல்லம் வாங்கி முந்தைய நாளைப் போலவே நீர்ப் பானையுடன் வழியில் உட்கார்ந்தான். அன்றும் பூக்காரர்கள் வந்து வெல்லமும் நீரும் வாங்கிச் சாப்பிட்டு நிறையப் பூக்களைக் கொடுத்துப் போனார்கள். ஆனந்தனும் அவற்றை விற்றுப் பணமாக்கி வெல்லம் வாங்கி நீர் சுமந்து வந்து தினமும் அவர்களுக்குக் கொடுக்கலானான். அவர்களும் பதிலுக்கு மலர்களைக் கொடுக்க அவற்றை விற்று ஆனந்தன் பணம் சேர்க்கலானான்.

அவனிடம் பத்து வெள்ளிப் பணங்கள் சேர்ந்து விட்டன. அவன் தினமும் நீரும் வெல்லமும் கொடுப்பதை நிறுத்தவில்லை. ஒரு நாள் இடியும் மழையும் பெய்து அரசனின் தோட்ட மரக்கிளைகளை ஒடித்து தோட்ட முழுவதும் பரப்பியது. அதை எப்படி அப்புறப் படுத்துவது எனத் தோட்டக் காரன் திகைத்தான். அப்போது ஆனந்தன் அவனிடம் "இந்த உலர்ந்த குச்சிகளையும் இலைகளையும் எனக்குக் கொடுத்தால் நான் அப்புறப்படுத்தி விடுகிறேன்" என்றான். தோட்டக்காரனும் சம்மதிக்க ஆனந்தன் சில சிறுவர்களுக்கு வெல்லக்கட்டிகள் கொடுத்து அந்தக் குப்பையை ஓரிடத்தில் குவித்தான்.

அப்போது அரண்மனைக் குயவன் அவ்வழியே வந்து அந்த உலர்ந்த குச்சிகளையும் இலைகளையும் பார்த்து ஆனந்தனிடம் விலை பேசினான். அதற்கு இருபத்தைந்து வெள்ளிப் பணம் கொடுத்து வாங்கிக் கொண்டான்.

ஆனந்தன் அதைக் கொண்டு நிறைய புல்கட்டுகளை வாங்கினான். அன்று அராபியநாட்டு வியாபாரி ஒருவன் தன் ஐநூறு குதிரைகளுடன் அவ்வூருக்கு வந்திருந்தான். அவர் தன் குதிரைகளுக்குப் புல் வாங்க வந்து

ஆனந்தனிடம் ஏராளமான புல் கட்டுகள் இருப்பது கண்டு நல்ல விலை கொடுத்து அவற்றை வாங்கிக் கொண்டான். இதனால் ஆனந்தனுக்கு ஆயிரம் வெள்ளிப் பணம் கிடைத்தது.

ஆனந்தன் துறைமுகத்திற்குப் போய் அப்போது தான் ஒரு கப்பல் புதிய சரக்குகளோடு வந்திருப்பதைக் கண்டான். உடனே அதன் வியாபாரியைக் கண்டு தான் அந்தச் சரக்கு முழுவதையும் வாங்கிக் கொள்வதாகக் கூறி விலை பேசி ஆயிரம் வெள்ளிப் பணத்தை முன் பணமாகக் கொடுத்தான்.

இதற்குள் கப்பல் வந்தது கேட்டு பல வியாபாரிகள் அதனை ஆனந்தன் வாங்கியதை அறிந்தனர். அவர்கள் ஆனந்தனிடமிருந்து அவன் சொன்ன விலைக்கு அச்சரக்குகளை வாங்கிக் கொண்டு போனார்கள். இதில் அவனுக்கு லட்சம் லட்சமாக லாபம் கிடைத்தது.

ஆனந்தன் அதிலிருந்து ஒரு லட்சம் வெள்ளிப் பணம் எடுத்துக் கொண்டு போய் போதிசத்வரான வர்த்தக சிரோன்மணியின் முன் வைத்து ''தாங்கள் கூறியபடி நடந்ததால் எனக்கு நிறையப் பணம் கிடைத்தது. இதை ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்றான்.

போதிசத்வரும் ''நான் சொன்னேனா? எப்போது?'' என்று கேட்க அவனும் அவர் செத்த எலியைப் பார்த்துக் கூறியதைச் சொல்லி தான் அதனை எடுத்துப் போய் விற்று படிப்படியாகப் பணம் பெற்ற விதத்தையும் கூறினான்.

அது கேட்ட போதிசத்வர் மகிழ்ந்து அவனுக்குத் தன் மகளை கல்யாணம் செய்து வைத்தார். அப்படிப்பட்ட அறிவு மிகுந்த வாலிபனை தம்முடனேயே வைத்துக் கொண்டு தன் சொத்து முழுவதையுமே அவனிடம் ஒப்படைத்து விட்டார்.





# மதயானை அடங்கியது!

புத்தரின் உறவினனான தேவதத்தன் அவரது சீடர் போல நடித்து வந்தான். அவன் மகத இளவரசன் அஜாதசத்துருவை அவனது தந்தை பிம்பிசாரனைக் கொன்று விட்டு அரசனாகி விடும்படித் தூண்டினான். அஜாதசத்துரு தன் நண்பனாகையால் தன் செல்வாக்கு ஓங்கும் என்று அவன் எண்ணினான்.

அஜாதசத்துருவும் தேவதத்தன் கூறியபடி ஒரு நாளிரவு பிம்பிசாரனின் படுக்கை அறைக்குள் போய் தூங்கிக்கொண்டிருந்த மன்னனைக் குத்திக் கொல்லத் தன் குத்துவாளை உயர்த்தினான்.





அப்போது தற்செயலாக வந்த ஒரு வீரன் அதைப் பார்த்துக் கத்தவே பலர் ஓடி வந்தனர். அஜாதசத்துருவும் திடீரென யாரோ கத்தியது கேட்டுக் கத்தியை நழுவ விட்டான். வீரர்கள் அவனைப் பிடித்து விட்டனர்.



தன்னை தேவதத்தன்தான் இப்படிச் செய்யச் சொன்னான் என்று அஜாதசத்துரு கூறி விட்டான். மந்திரிகள் அஜாதசத்துருவுக்கு தண்டனை விதிக்க வேண்டும் என்றார்கள். பிம்பிசாரனோ "அவன் பிறர் பேச்சைக் கேட்டுக் கெட்டான். நாட்டை நான் இவனுக்குக் கொடுத்தால் திருந்தி விடுவான்" எனக் கூறி அவனை மன்னித்தான்.

அஜாதசத்துருவும் பிம்பிசாரனின் கால்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டு இனி மேல்தான் ஒழுங்காக இருப்பதாக உறுதி கூறினான். பிம்பிசாரனும் தனது நாட்டை அஜாதசத்துருவுக்கு அளித்தான். அஜாத சத்துரு தேவதத்தனைத் தன்னிடம் அண்டவில்லை. மாறாக அவன் புத்தரின் உபதேசங்களைக் கேட்கலானான். பௌத்த, ஜைன மதங்களுக்கு ஆதரவும் அளித்தான்.





அஜாதசத்துருவின் போக்கைக் கண்டு தேவதத்தன் புத்தர் மீது பொறாமை கொண்டு அவரைக் கொல்லத் தீர்மானித்தான். புத்தர் மாலை வேளைகளில் ஒரு மலை அடிவாரத்திற்கு உலாவப் போவது அவனுக்குத் தெரியும். ஒரு நாள் அவர் உலாவ வந்த போது மேலிருந்து ஒரு பாறையை அவர் மீது விழும்படி உருட்டி விட்டான்.

அதேசமயம் மற்றொரு பாறை உருண்டு வந்து புத்தரைத் தாக்க வந்து பாறை மீது மோதி அதனை வேறு பக்கமாகத் திருப்பி விட்டது. இரு பாறைகளும் புத்தர் மீது படாமல் அவருக்குச் சற்று தூரத்தில் விழுந்தன. புத்தருக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படவில்லை.





பின்னர் தேவதத்தன் நீலகிரி என்ற யானையின் மாவுத்தனோடு சேர்ந்து சதி செய்து ஒரு நாள் புத்தர் வரும் வழியில் அந்த மதயானையை அவரைத் தாக்க ஏவி விட்டான். யானை அவரை மிதித்துக் கொன்று விடும் என அவன் எதிர்பார்த்தான்.

மதம் பிடித்த யானை வருவது கண்டு எல்லோரும் பயந்து ஓடினார்கள். புத்தரின் சீடர்கள் அவரைக் காக்க அவர் முன் செல்லவே புத்தர் அவர்களைத் தடுத்து நிறுத்தி விட்டு அவரே முன்னே சென்றார்.





இந்தக் குழப்பத்தில் ஒரு பெண் தன் குழந்தையைத் தெருவில் போட்டு விட்டு ஓடி விட்டாள். யானை அந்தக் குழந்தையை அணுகி விட்டது. ''ஐயோ குழந்தை'' என்று பயந்து மக்கள் கூவினார்கள்.

புத்தர் விரைந்து சென்று அக்குழந்தையின் முன் நின்று கொண்டார். அதேசமயம் வேகமாக வந்த யானை புத்தரைப் பார்த்ததும் 'டக்'கென்று நின்று விட்டது. அது கண்டு மக்கள் வியப்புற்று மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள்.





புத்தர் அந்த யானையிடம் ''நீலகிரி! அடங்கிப் போ. மதத்தை விட்டு விடு'' என்றார். யானையும் தன் துதிக்கையை உயர்த்தி அவரை வணங்கியது. புத்தர் அதனைத் தடவிக் கொடுத்தார். அது கண்டு மக்கள் ''ஆகா ! என்ன சக்தி! மத யானையையே அடக்கி விட்டாரே'' என்று புத்தரைப் போற்றிப் புகழ்ந்தார்கள்.

# பணக்காரன் பவிஷு!

**சு**ப்லபய்யன் பணக்காரன். ஆனால் கஞ்சன். ஒரு முறை கந்தன் அவன் வீட்டில் வேலை செய்து விட்டுக் கூலி கேட்டான். சுப்பைய்யனும் ''ஐந்து ரூபாய் நோட்டாக இருக்கிறது. ஒரு ரூபாயைக் கொடுத்து விட்டு உன் கூலி நான்கு ரூபாயை வாங்கிப் போ'' என்றான்.

கந்தனோ ''என்னிடம் ஒரு ரூபாய் இல்லையே. மாற்றித் தருகிறேன்'' என்று சுப்பைய்யனிடம் கூறினான். சுப்பைய்யனோ ''அதெல்லாம் முடியாது. ஒரு ரூபாயைக் கொடுத்து விட்டு ஐந்து ரூபாய்நோட்டை வாங்கிப் போ. இல்லாவிட்டால் நாளைக்கு வா'' என்றான்.

இதேசமயம் லட்சாதிபதி லட்சுமணன் அங்கு வந்தான். உடனே சுப்பைய்யன் ''இவனுக்கு நாலு ரூபாய் கூலி கொடுக்க வேண்டும். ஐந்து ரூபாய்க்குச் சில்லரை இருந்தால் கொடுங்கள்'' என்று நோட்டை நீட்டினான். லட்சுமணனும் நோட்டை வாங்கிச் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டு ''நான்கு ரூபாய்கள்தான் இருக்கின்றன. இதைக் கொடுத்து அவனை அனுப்புங்கள். நான் அப்புறம் உங்களுக்கு ஒரு ரூபாய் கொடுக்கிறேன்.'' என்றான். சுப்பைய்யனும் நான்கு ரூபாய்களை வாங்கிக் கந்தனிடம் கொடுத்து அனுப்பினான்.

பல நாட்களாகியும் லட்சுமணன் ஒரு ரூபாய் சுப்பைய்யனுக்குத் தரவே இல்லை. அப்போது அவன் ''அடடா! அந்த ஏழைக் கந்தனை ஒரு ரூபாய்க்கு நம்ப மறுத்தேன். இந்தப் பணக்காரனை நம்பினேன். இவனோ ஏமாற்றி விட்டானே'' என்று எண்ணிப் மனம் புழுங்கினான்.





# இப்படிப் பழகு!

நாகப்பனும் ஏகப்பனும் ஒரே ஊர்க்காரர்கள். இருவரும் படித்துப் பெரியவர்களாகித் தம் குடும்பத்தவருடன் பட்டணத்தில் குடித்தனம் போட்டார்கள். இருவருக்கும் பட்டணத்தில் சாதாரண குமாஸ்தா வேலைதான் கிடைத்தது. நாகப்பன் பகட்டாக வாழும் பகுதியில் குடி இருந்தான். ஏகப்பனோ குடிசைகள் நிறைந்த ஒரு பகுதியில் ஒரு வீட்டில் இருந்தான்.

நாகப்பன் கொஞ்சம் கர்வம் பிடித்தவன். உலக அனுபவம் போதாதவன். ஏகப்பனோ எல்லோரிடமும் சகஜமாகப் பழகுபவன். உலக அனுபவம்மிக்கவன்.

நாகப்பன் இருந்த பகுதியில் அண்டை அயலார் பகட்டாக உடை உடுத்தி நகை அணிந்து எப்போதும் தம் பெருமையையே நாகப்பனிடமும் அவன் மனைவியிடமும் பீற்றிக்கொண்டார்கள். நாகப்பனுக்கோ தான் என்ற அகம்பாவம் இருந்ததால் அவனும் சட்டென அவர்களைத் தூக்கித் எறிந்து பேசலானான். இதனால் அவனது அண்டை வீட்டுக்காரர்களும் சுற்றுப் பக்கத்தில் உள்ளவர்களும் அவனை வெறுத்து அவனோடு பேசாமல் அவன் வீட்டுப்பக்கம் கூடப் போகாமல் இருந்தனர்.

நாகப்பனின் வீடு மிகவும் வசதியாக இருந்தாலும் அண்டை அயலாரின் நல்ல உறவும் நட்பும் இல்லாததால் மனம் புழுங்கலானான். தன்னை விடக் குறைவான வசதி உள்ள வீட்டிலுள்ள ஏகப்பன் தன் சுற்றுப்புறத்தில் உள்ளவர்களின் அன்பையும் ஆதரவையும் பெற்று இருப்பதையும் கண்டடான்.

இராஜ. சிவசாமி

ஒரு நாள் நாகப்பன் ஏகப்பனிடம் ''உன் வீட்டுப் பக்கத்தில் உள்ளவர்கள் எல்லாம் நல்லவர்கள். என் வீட்டுப் பக்கத்தில் உள்ளவர்கள் பொருமை பிடித்தவர்கள். பிறர் நல்ல விதமாக வாழ்வதைச் சகிக்காதவர்கள். எனக்கு உன்னை விட வசதியான வீடு இருந்தும் என்னுல் சந்தோஷமாக வாழ முடியவில்லையே" என்று கூறித் தன் மனத்திலுள்ள துயரத்தை வெளிப்படுத்தினுன்.

ஏகப்பனும் ''உன் அண்டை அயலார் நல்லவர்கள் போலத்தானே தென்படுகிறுர்கள். எல்லாம் நாம் பழகுவதில் இருக்கிறது. நீ வேண்டுமானுல் என் வீட்டில் கொஞ்ச நாள் இரு. நான் உன் வீட்டில் கொஞ்ச நாட்கள் இருக்கிறேன்'' என்ருன். நாகப்பனும் அதற்குச் சம்மதித்தான். நாகப்பன் ஏகப்பனின் வீட்டிற்கு வர, ஏகப்பன் அவன் வீட்டிற்குச் சென்ருன். நாகப்பனுல் ஏகப்பனின் வீட்டில் அதிக நாட்கள் இருக்க முடியவில்லை. எப்போது பார்த்தாலும் யாராவது வந்து ஏதாவது கடன் கேட்டு வாங்கிக் கொண்டே இருந்தார்கள். வாங்கின பொருளையோ பணத்தையோ திருப்பிக் கொடுக்கவும் இல்லை. அதனுல் நாகப்பன் கொஞ்ச நாட்களுக்குப் பின் யாருக்கும் எதுவும் கொடுக்காமல் இருந்தான். இதனுல் சுற்றிலும் உள்ளவர்கள் அவனை இரக்கமற்ற பாவி என்று



திட்டி வெறுத்து அவனை அலட்சியம் செய்யலானார்கள். நாகப்பனுக்குத்தான் முன்பு இருந்த வீடே எவ்வளவோ மேல் எனப் பட்டது.

நாகப்பன் ஏகப்பனைச் சந்தித்து தன் நிலையைக் கூறினான். பிறகு அவனோடு அவன் இருந்த வீட்டிற்குச் சென்றான். அப்போது பேட்டையில் உள்ளவர்கள் ஏகப்பனிடம் சிரித்துப் பேசினார்கள். ஆனால் நாகப்பனைப் பார்த்து முகத்தை சுளித்தார்கள்.

வீட்டில் ஏகப்பனோடு உட்கார்ந்த நாகப்பன் ''இவர்கள் உன்னிடம் இப்படிப் பேசுகிறார்களே. என்னோடு ஏன் பேச மாட்டேன் என்கிறார்கள்?'' என்று கேட்டான்.

ஏகப்பனும் சிரித்தவாறே ''நாகப்பா, அண்டை அயலார்களுடன் பழகுவதே ஒரு தனிக் கலை. இது ஒன்றும் கஷ்டமில்லை. நீ உன்னை உயர்ந்தவனாக நினைத்துக் கொள்ளாமல் அவர்களைப் புகழ்ந்தால் போதும். உன்னோடு சகஜமாகப் பழகுவார்கள். அவர்கள் கூறுவதைத் தலை ஆட்டிக் கேட்பதால் நமக்கே நன்மை. நீ உன் பெருமையைக் காட்டினால் நீ தான் அவர்களுக்கு எல்லாம் கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுத்து உதவா விட்டால் உன்னை இகழ்ந்து வெறுப்பார்கள். இதைத் தெரிந்து கொண்டால் போதும். அண்டை அயலார் எப்போதும் நமக்கு நண்பர்களாக இருப்பார்கள்'' என்றான்.

நாகப்பனும் ''ஏகப்பா! நீ சொல்வதே சரி. இதை இவ்வளவு நாட்களாகத் தெரிந்து கொள்ளவில்லை. நாம் பிறரோடு பழகுவதில் தான் நம் சுகம் இருக்கிறது. இனி நீ சொன்னது போலவே செய்கிறேன்'' எனக் கூறிச் சில நாட்களுக்குப் பின் தன் பழைய வீட்டிற்கே போனான். ஏகப்பன் கூறியபடி அவன் அண்டை அயலார்களுடன் பழகி சுகமாக இருக்கலானான்.



# எது முதலில்?

ஒரு அரசன் முன் இரு பிரச்னைகள் தோன்றின. ஒன்று தன் பழங்காலக் கோட்டை மதிலைச் செப்பனிடுவது. மற்றது நாட்டிலுள்ள திருடர்களைப் பிடிப்பது. இதில் எதை முதலில் செய்வது என யோசிக்கலானான்.

ஒரு நாள் மாலை மாறுவேடத்தில் அவன் ஒரு வயலை அடைந்த போது அங்கு ஓரிடத்தில் அறுவடைக்குப் பயிர் தயாராக இருந்தது. ஆனால் வயலின் சொந்தக்காரன் பயிரை அறுவடை செய்யாமல் வயலுக்கு வேலி போட்டுக் கொண்டிருந்தான். அரசன் அவனிடம் ''பயிரை அறுவடை செய்யாமல் வேலியை ஏன் போடுகிறாய்?'' என்று கேட்டான்.

அந்த விவசாயி அரசனை ஏற இறங்கப் பார்த்து ''பயிரை அறுவடை செய்து போட்டு விடலாம். ஆனால் வயலுக்குள் திருடன் வராமல் முதலில் பாதுகாக்க வேண்டுமே. அறுவடை செய்து போட்டு விட்டு வேலி போடா விட்டால் எல்லாவற்றையும் தூக்கிக் கொண்டு போய் விடுவார்களே'' என்றான். அரசனின் பிரச்னை தீர்ந்தது. அவன் முதலில் தன் கோட்டை மதிலைச் செப்பனிடத் தீர்மானித்தான்.





# அரசகுமாரன்தான்!

விதேக தேசத்தில் விபூஷணன் என்ற வாலிபன் இருந்தான். அவன் ஏழையான போதிலும் அழகாக இருந்தான். அவன் இளம் வயதில் காசியில் நன்கு படித்து விட்டு முழுத்தேர்ச்சி பெற்றபின் தன் நாட்டிற்கு வந்து கொண்டிருந்தான்.

ஊர் ஊராகத் தங்கி ஒரு நாள் புரந்தரம் என்ற நாட்டின் தலைநகரை அவன் அடைந்தான் நன்கு இருட்டி விட்டது. எங்கே தங்குவது என யோசித்துநேராக அரண்மனைக்குப் போய் அரசனைக் கண்டு ''அரசே. நான் அயல்நாட்டுப் பயணி. இன்றிரவு எனக்கு உணவு அளித்து இங்கு தங்க இடம் கொடுங்கள். நாளைக் காலை எழுந்து என் வழியே செல்கிறேன்'' என்றான். புரந்தர மன்னன் அவனது அழகைக் கண்டு ஆச்சரியப்பட்டான். அவனது துணிச்சலைக் கண்டு வியந்தான். உடனே அவனைக் குளித்து வருமாறு சொல்லித் தன் குளியல்அறைக்கு அனுப்பினான். அரசனோடுஇருந்த அரசி அப்போது ''இவன்யாரோ அரச குமாரன். எளிய உடையில் வந்திருக்கிறான். அவனது அழகே அவன் ஒரு ராஜகுமாரன் எனக் கூறுகிறது. எனவே விசாரித்துப் பாருங்கள். எல்லாம் சரியாக இருந்தால்நம் மகளை அவனுக்குக் கல்யாணம் செய்து வைத்து விடலாம்'' என்றான்.

அரசனும் ''நீ கூறுவதுபோல அவன் மாறு வேஷத்தில் வந்த அரச குமாரன் என்றால் நாம் கேட்டால் மட்டும் உண்மையைச் சொல்லி விடுவானா என்ன? அவன் அரசகுமாரன் தானா என்று

சிவ. ஞானசம்பந்தன்

வேறு ஏதாவது ஒரு வழியில் நாம் கண்டு பிடிக்கவேண்டும். நம் மந்திரியை இதற்கு என்ன வழி என்று கேட்கலாம்'' என்று கூறி மந்திரியை அழைத்து வரச் சொன்ஞன்.

அரசனிடமிருந்து விஷயத்தைத் தெரிந்து கொண்டமந்திரி ''கவலைப்படாதீர்கள். நான் ஒரே பரீட்சையில் இவன் அரசகுமாரஞ இல்லையா என்று கண்டு பிடித்துச் சொல்கிறேன். அவனை இரண்டு நாட்கள் நம் அரண்மனையில் தங்க வையுங்கள்'' என்ருன்.

மறுநாள் காலை அரசன் விபூஷணனிடம் ''நாளை என் மகளின் பிறந்தநாள். எனவே நீ இன்றும் நாளையும் என் அரண்மனையில் தங்கி இருந்து விட்டுப்போ'' என்ருன். இதற்குள் மந்திரி விபூஷணனுக்குப் படுக்க ஒரு அறையை ஏற்பாடு செய்து அதில் ஒரு மரப் பலகை போட்ட கட்டிலைப் போட்டிருந்தான்.

விபூஷணன் சாப்பிட்டு விட்டு படுக்கத் தன் அறைக்கு வந்தான். அறைக் கதவைத் தாளிட்டு மரக் கட்டிலின் மீது உட்கார்ந்து தன் சட்டையை அவன் கழற்றிஞன். அப்போது அவனது சட்டையின் இருபக்கத்துப் பைகளிலிருந்தும் வேர்க்



கடலைப் பருப்புகள் அறை முழுவதும் சிதறி விழுந்தன.

அன்று காலை அவன் தன் இரு கைகளிலும் வழியில் கிடைத்த வேர்க் கடலையை உரித்துப் போட்ட பருப்புக்களைப் பற்றியக் நினைவே அது வரை அவனுக்கு வரவில்லை. இப்போது அவை சிதறி விழவே அவன் ''அடேடே! அறை முழுவதும் வேர் கடலை விழுந்து விட்டதே. எவ்வளவு சுத்தமான அரை! தரை கண்ணுடி போல் இருக்கிறதே. இங்கு இந்த வேர்க் கடலைப் பருப்புகள் குப்பை போலச் சிதறிக் கிடப்பதைப் பார்த்தால் யாராவது ஒரு வேளை



என்னைக் கோபித்துக் கொள்வார்கள். எனவே இப்போதே எல்லாவற்றையும் பொறுக்கி எடுக்கிறேன். ஒரு வேளை நாளை அரசன் பார்த்தால் கோபித்தாலும் கோபித்துக் கொள்வான்'' என்று எண்ணி அறையில் அங்கும் இங்குமாகப் போய் சிதறி விழுந்த வேர்க்கடலைப் பருப்பை ஒவ்வொன்ருகப் பொறுக்கலானுன். எல்லாவற்றையும் எடுக்கப் பாதி ராத்திரிக்கும் மேலாகி விட்டது.

விபூஷணன் என்ன செய்கிருன் என்பதைக் காண மந்திரி ஒருவனை அனுப்பி இருந்தான் அவன் சாவி ஓட்டை வழியாக அறைக்குள் நடப்பதைப் பார்த்தான். விபூஷணன் கட்டிலின் மீது படுக்காமல் பாதிராத்திரி வரை நடந்து கொண்டிருப்பதைப் பார்த்தான். பிறகு அந்த ஆள் தூங்கப் போய் விட்டான்.

காலையில் மந்திரியிடம் அவன் ''நேற்றிரவு முழுவதும் விபூஷணன் தூங்கவே இல்லை அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டே இருந்தார். அவருக்கு அந்தக் கட்டிலில் படுத்துக் கொண்டால் தூக்கம் வரவில்லை போலிருக்கிறது'' என்ருன்.

மந்திரி அரசனிடம் போய் ''அரசே, விபூஷணன் சுகவாழ்வு வாழ்பவன். நான் போட்ட மரப்பலகைக் கட்டிலில் படுக்காமலும் தூக்கம் பிடிக்காமலும் இரவு முழுவதும் அறையில் குறுக்கிலும் நெடுக்கிலும் நடந்திருக்கிருன். சாதாரண குடும்பத்தில் பிறந்தவன் என்ருல் அந்தக் கட்டிலில் படுத்துத் தூங்கி இருப்பானே! எனவே இவன் ஒரு அரச குமாரன் தான். சந்தேகமே இல்லை. இன்று இரவு இன்ெனுரு பரீட்சை வைத்து உறுதி செய்கிறேன்'' என்று கூறிப் போனுன்.

இரவில் பொறுக்கிய வேர்க்கடலைப் பருப்புகளை விபூஷணன் தின்று விட்டே அதிகாலையில் படுத்தான். சற்று நேரத்திற்

கெல்லாம் அவன் எழுந்து வந்தான். வேர்க்கடலைப் பருப்பு அவன் வயிற்றைச் சங்கடப் படுத்தி விட்டது. அதனுல் அன்றைய விருந்தில் அவன் எதையும் அதிகமாகச் சாப்பிடாமல் ஒவ்வொன்றிலும் கொஞ்சம் எடுத்து ருசிபார்த்து விட்டு வைப்பதை அரசனும் அரசியும் கவனித்தார்கள் அவர்களுக்கு அப்போது அவன் அரச குடும்பத்தில் பிறந்தவனே என்ற நம்பிக்கை வலுப்பட்டது.

அன்றிரவு மந்திரி விபூஷணன் படுத்துக் கொள்ள சப்பர மஞ்சம் போட்டு பட்டு மெத்தையை விரிக்கச் செய்தான். அன்று அறைக்குள் வந்து அந்த மஞ்சத்தில் படுத்த விபூஷணன் மறு நிமிடமே நன்கு தூங்கி விட்டான். ஏனென்றுல் முதல் நாள் தான் அவன் சரியாகத் தூங்க வில்லையே.

மறுநாள் மந்திரி அரசனிடமும் அரசியிடமும் ''இவன் அரச குமாரனேதான். சந்தேகமே இல்லை. அரச குமாரியை இவனுக்குக் கண்ணைமூடிக் கொண்டு கல்யாணம் செய்து வைக்கலாம். நீங்கள் சந்தேகமே பட வேண்டாம்'' என்று அடித்துக் கூறினுன்.

அரசனும் அரசியும் விபூஷணனிடம் கல்யாணம் பற்றிப் பேசினுர்கள். விபூஷணன் திடுக்கிட்டான். பிறகு அக் கல்யா





யாணத்திற்கு ஒப்புக் கொண்டான். அவனுக்கும் அரசகுமாரிக்கும் விமரிசையாகக் கல்யாணம் நடந்தது.

சில நாட்களாயின. அரசகுமாரி விபூஷணனிடம் ''நாம் எவ்வளவு நாட்களுக்குத்தான் இங்கேயே இருப்பது? நம் நாட்டிற்குப் போக வேண்டமா?'' என்று கேட்டாள். அப்போது விபூஷணன் ''நம் நாடா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

அரசகுமாரியும் ''ஆமாம். நீங்கள் அரசகுமாரர் என்று தெரிந்த பிறகுதானே என் தந்தை என்னை உங்களுக்கு மணமுடித்து வைத்தார். இனியும் மறைக்க வேண்டாம். நாம் நம் நாட்டிற்குப் போய் விடலாம்'' என்று சொல்லி மந்திரி வைத்த பரீட்சைகளைக் கூறினாள்

விபூஷணன் என்ன செய்வான்! தைரியத்தை இழந்து விடவில்லை. அவன் ''சரி, நாளை கிளம்பு. என் நாட்டிற்கு அழைத்துப் போகிறேன்'' என்றான். மறு நாள் அவனும் அரசகுமாரியும் அரசனிடமும் அரசியிடமும் விடை பெற்றுக் கொண்டு கிளம்பினார்கள். அவன் பல மாதங்கள் வரை அரசகுமாரியை, அழைத்துக் கொண்டு பல நாடுகளுக்குப் போய் முடிவில் கலிங்க நாட்டை அடைந்தான். அங்கே ஒரு கிழவியின் வீட்டில் அவன் தன் மனைவியோடு தங்கினான்.

அக் கிழவிக்கு விபூஷணனைப் பார்த்ததுமே ஏதோ சந்தேகம் ஏற்பட்டது. எனவே அவன் வெளியே போயிருந்தபோது அவள் அரசகுமாரியிடம் ''உங்கள் இருவரையும் பார்த்தால் ராஜகுமாரனும் ராஜகுமாரியும் போல் தெரிகிறதே. நீங்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்கள்?'' என்று கேட்டாள்.

அரசகுமாரியும் ''நான் புரந்தர மன்னனின் மகள். இந்த ராஜகுமாரனை மணந்து கொண்டேன்.

இவர் என்னைத் தன் நாட்டிற்கு அழைத்துப்போய்க் கொண்டிருக்கிறார். எந்த நாட்டைச் சேர்ந்தவர் என்று எனக்குத் தெரியாது'' என்றாள்.

உடனே கிழவி கலிங்க மன்னனின் அரண்மனைக்கு ஓடினாள். அரசனிடமும் அரசியிடமும் ''காணாமல் போன உங்களது மகன் அகப்பட்டு விட்டான். சிறுவயதில் அவனை வளர்த்தவள் நான். அதனால் அடையாளம் கண்டு கொண்டேன்.'' எனக் கூறித் தன் வீட்டிலுள்ள இருவரைப் பற்றிக் கூறினாள்.

கலிங்க மன்னன் உடனே அவர்களை அழைத்துவரச் சொன்னான். அரசியும் தன் குழந்தைக்கு இருந்த மச்ச அடையாளங்கள் அப்படியே விபூஷணனின் உடலில் இருப்பது கண்டு ''ஆமாம். இவன் நம் மகனே. திடீரென்று இவனை அரண்மனையிலிருந்து யாரோ தூக்கிப் போய் விட்டார்கள்'' என்றாள். விபூஷணனும் ''ஆமாம், சிறு வயதில் நான் அனாதையாகத் திரிந்தேன். காசியில் படித்தேன். விதேக தேசத்திற்குப் புறப்பட்டேன். வழியில் புரந்தர மன்னன் என்னைக் கண்டு தன் அரண்மனையில் இரண்டு நாட்கள் தங்க வைத்தான். பிறகு நான் அரச குமாரன் என எப்படியோ கண்டு கொண்டு தன் மகளை எனக்குக் கல்யாணம் செய்து வைத்தான்'' என்றான்.

கலிங்க மன்னன் ஒரேயடியாக மகிழ்ந்து போனான். விபூஷணனை இளையராஜா என்று அறிவித்தான். பிறகு புரந்தர மன்னனுக்கும் அவன் தகவல் தெரிவித்தான் அப்போது புரந்தரநாட்டு மந்திரி ''நான் அன்றைக்கே சொல்லவில்லையா அவன் அரசகுமாரன் என்று! கலிங்க மன்னனின் மகன் உங்களுக்கு மாப்பிள்ளையானது உங்களது பேரதிர்ஷ்டமே'' என்றான்.



# மானம் தப்பியது!

ஒரு முறை மாறு வேடத்தில் ஒரு நாட்டு மன்னன் ஒரு சிறிய ஊரை அடைந்தான். அப்போது அயல் நாட்டு வியபாரிகள் சிலர் அந்த ஊருக்கு வந்திருந்தார்கள். அந்த ஊரில் வெளியூரிலிருந்து வரும் பயணிகள் தங்க சத்திரம் எதுவுமே இருக்கவில்லை.

அந்த வியாபாரிகள் ''இந்த ஊரில் ஒரு சத்திரம்கூட இல்லையே. இந்த நாட்டு மன்னனின் ஆட்சி என்ன ஆட்சி!'' என்று இகழ்ந்து பேசினார்கள். அதைக் கேட்டுக் கொண்டே வந்த ஒரு அரசாங்க வீரன் ''இவ்வூரில் சத்திரம் இல்லா விட்டாலும், உங்களைப் போல அயல் நாடுகளிருந்து வருபவர்களுக்கு இடம் கொடுத்து உணவு அளிக்க எங்களுக்கு எல்லாம் அரசர் கட்டளை இட்டிருக்கிறார். வாருங்கள் என் வீட்டிற்கு. அங்கே தங்கி சாப்பிட்டுப் படுத்துத் தூங்கலாம்'' என்றான்.

அவ்வியாபாரிகள் ''அப்படியா! உங்கள் அரசரின் ஆட்சி நல்ல ஆட்சிதான்'' என்று கூறி அவனோடு சென்றார்கள். தான் அப்படி உத்தரவு பிறப்பிக்காத போதிலும் தன் மானத்தை அந்த வீரன் காத்தான் என அரசன் கண்டு அந்த வீரனுக்குப் பரிசுகள் கொடுத்ததோடு அவ்வூரில் ஒரு சத்திரத்தையும் கட்டினான்.






விசுவாமித்திரர் திரிசங்கு மன்னனை சொர்க்க லோகத்திற்கு அனுப்பிய பின் அவனது நாட்டை அவனது மகனான அரிச்சந்திரன் ஆண்டு வந்தான். ஆனால் அவனுக்கு வெகுநாட்களாகியும் குழந்தையே பிறக்கவில்லை. அவன் தன் புரோகிதரான வசிஷ்டரிடம் ''முனி சிரேஷ்டரே, நீங்கள் முக்காலமும் உணர்ந்தவர். அற்புத சக்தி வாய்ந்தவர். எனவே எனக்கு மக்கட் பேறு இல்லாததற்குக் காரணம் என்ன என்று அறிந்து கூற வேண்டும்'' என வேண்டினான்.

வசிஷ்டரும் ''மக்கட் பேறு இல்லை என்றால் அது போன்ற வருத்தம் வேறு எதுவுமே கிடையாதுதான். நீ வருணனை வழிபட்டுப் பார். அவன் உனக்கு மக்கட் பேற்றை அளிப்பான். நாமும் முயன்றால்தான் தெய்வமும் அருளும்'' என்றார். அது கேட்டு அரிச்சந்திரன் ''நீங்கள் கூறுவது போலவே இப்போதே செய்கிறேன். நான் நாட்டை விட்டுக் காட்டிற்குப் போய் வருணனைக் குறித்துத் தவம் செய்து வரம் பெறுகிறேன்'' எனக் குருவிடம் கூறி விட்டு கங்கைக் கரைக்குப் போய் அமர்ந்து வருணனைக் குறித்துக் கடுந் தவம் புரிந்தான்.

வருணனும் அந்தத் தவத்தால் மகிழ்ந்து போய் கொஞ்ச காலத்திற்குப் பின் அரிசந்திரன் முன் தோன்றி ''உனக்கு என்ன



வரம் வேண்டும்? என்று கேட்டான். அரிச்சந்திரனும் 'எனக்கு ஒரு ஆண் குழந்தை பிறக்க அருள வேண்டும்'' என்று வேண்டினன்.

வருணனும் ''ஆகா, அளிக்கிறேன். ஆனல் உன் மகனை எனக்கு பலி கொடுக்க வேண்டி இருக்கும்.'' என்று சிரித்தவாறே கூறினன். அரிச்சந்திரன் அது கேட்டுத் திகைத்தான். ஆனலும் சமாளித்துக்கொண்டு அவன் ''ஆகா, மக்கட் பேறு கிடைப்பதே மாபெரும் பாக்கியம். உங்கள் விருப்பம் போலச் செய்கிறேன். எனக்கு ஆண் குழந்தை பிறக்க அருளுங்கள். அது போதும்'' என்ருன். வருணனும் அவ்விதமே வரம் அளித்து விட்டு மறைந்தான்.

அரிச்சந்திரனும் அரண்மனைக்கு வந்து தன் மனைவியிடம் நடந்ததை கூற அவளும் மகிழ்ந்து போனள். ஒருவருடத்தில் அவள் அழகிய ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அரிச்சந்திரன் அவனுக்கு ரோஹிதன் எனப் பெயர் வைத்தான். குழந்தை பிறந்ததற்காக நாடெங்கும் உற்சவமே நடத்தி விட்டான்.

அப்போது வருணன் ஒரு பிராம்மணன் உருவில் வந்து குழந்தையை ஆசீர்வதித்தான். பிறகு அரிச்சந்திரனிடம் தான் இன்னன் எனக் கூறி ''உனக்குக் குழந்தை பிறந்தாகி விட்டது. இனி யாகம் நடத்தி நீ முன்பு எனக்கு வாக்கு அளித்தபடி அதனை எனக்கு பலியாகக் கொடு'' என்ருன்.

அது கேட்டு அரிச்சந்திரன் திடுக்கிட்டான். ஆனலும் ''தேவா! குழந்தை பிறந்தால் தந்தைக்குப் பத்துநாள் தீட்டும் தாய்க்கு நாற்பது நாள் தீட்டும் உண்டு. எனவே இப்போது எப்படி யாகம் செய்வது? எங்கள் தீட்டுப் போகட்டும், பிறகு செய்கிறேன்'' என்று அவன் கூறினன்.

வருணனும் ''அப்படியானுல் நாற்பது நாட்கள் கழித்து யாகத்தை ஆரம்பி'' என்று கூறி விட்டுப் போனுன். அரிச் சந்திரனும் அப்போதைக்கு ஆபத்து விலகியதே என எண்ணி மகிழ்ந்து தான தர்மங்களைச் செய்தான்.

ஆனுல் நாற்பது நாட்களான தும் வருணன் பிராம்மணன் வடிவில் அரிச்சந்திரனின் முன் வந்து அவனிடம் யாகத்தை ஆரம் பிக்கும்படிக் கூறினுன். அரிச் சந்திரன் அவன் கால்களில் விழுந்து வணங்கி தழதழத்த குரலில் ''தேவா! உங்களுக்குத் தெரியாததா? பல்கூட முளைக்காத பிராணியை யாகத்தில் பலி கொடுக்க முடியாதே. அதனுல் யாக பலன் கிடைக்காதே'' என்ருன்.

வருணனும் ''சரி, உன்குழந் தைக்குப் பல் முளைத்ததும் யாகத்தைச் செய்'' எனக் கூறி விட்டு மறைந்தான். சில மாதங் களாயின. ரோஹிதனுக்குப் பல் லும் முளைத்து விட்டது. வரு ணன் வந்து விட்டான். அரிச் சந்திரனிடம் யாகத்தைச் செய் யும்படிக் கூறினுன். அப்போது அரிச்சந்திரன் ''சிகை வைத்த பாலனே யாகப் பசுவாக இருக் கத் தகுதி பெற்றவன். எனவே இவனுக்குக் குடுமி வைத்ததும் யாகம் செய்கிறேன்'' என்ருன். அது கேட்டு வருணன் ''நீ





உன் மகன் மீது கொண்ட பாசத்தால் ஏதோ சாக்குப் போக்கு சொல்லி என்னை அனுப்புகிறாய். சரி. இம்முறை போகிறேன். அடுத்த தடவை எந்தக் காரணமும் சொல்லாமல் யாகத்தை ஆரம்பித்து உன் மகனை எனக்கு பலி கொடுத்து விட வேண்டும்'' என்று அவனை எச்சரித்து விட்டுப் போனான்.

குடுமி வைத்ததும் வருணன் வந்து விட்டான். அப்போது அரிச்சந்திரன் ''இவனுக்கு உபநயனம் நடத்தினாலே யாகப் பசுவாக ஆகத் தகுதி பெறுவான். எனவே பூணூல் போடும்வரை காத்திருக்க வேண்டும்'' என்றான்.

வருணனோ ''ஓ! இவனது பதினோருவது வயது வரையா காத்திருப்பது? க்ஷத்திரியனுக்கு அந்த வயதில்தான் உபநயனம் நடத்த வேண்டும். சரி நீ முறைப்படி அவனுக்குப் பதினோருவது வயதில் பூணூல் போடு. அதன் பிறகு யாகத்தைச் செய்து இவனை எனக்கு பலி கொடு. நீ சொல்வது சாஸ்திரங்களில் கூறப்பட்டிருப்பதுதான். எனவே அதன்படி நடந்து தானே ஆக வேண்டும்'' என்று கூறி விட்டுப் போனான்.

பத்து வருடங்களாகி பதினோருவது வயது ரோஹிதனுக்கு வந்தது. அரிச்சந்திரன் அவனுக்கு உபநயனம் செய்தான். உபநயனம் முடிந்ததும் வருணன் வந்து நின்று விட்டான். ''உம். யாகத்தை ஆரம்பி'' என அவன் கூறவே அரிச்சந்திரனும் ''ஆரம்பிக்க வேண்டியதுதான். ஆனால் இவன் இப்போதுதான் வேதங்களைக் கற்க ஆரம்பித்திருக்கிறான். தயவு செய்து அவனது படிப்பு முடியும் வரை காத்திருங்கள். அவனை கண்டிப்பாக அப்போது உங்களுக்கு பலி கொடுக்கிறேன்' என்றான்.

வருணனுக்குக் கோபம் வந்து விட்டது. அவன் அரிச்-

சந்திரனிடம் ''நீ என்ன எப்போது பார்த்தாலும் ஏதாவது ஒரு சாக்கு சொல்கிருயே? மகன் மீது வைத்துள்ள ஆசையால் அவனை விட்டுப் பிரிய உனக்கு மனம் இல்லையா? சரி. இந்தத் தடவையும் விட்டுக் கொடுக்கிறேன். அவனது வேதாப்பியாசம் முடிந்ததும் நீ யாகம் செய்து இவனை எனக்கு பலி கொடுத்துவிட வேண்டும். தெரிந்ததா? வேதங்களைக் கற்றவனை யாகத்தில் பலி கொடுத்தாலும் நல்ல பலனே கிட்டும்.'' என்று கூறி விட்டுப் போனுன்.

ரோஹிதனின் வேதாப்பியாசம் முடியும் நிலை வந்து விட்டது. அரிச்சந்திரன் பிரமை பிடித்தவன் போல உட்கார்ந்து விட்டான். அது கண்டு ரோஹிதன் தன் தந்தையிடம் அவர் அப்படி இருக்கக் காரணத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டான் அவனுக்கும் தன் உயிர் போய் விடுமோ என்ற பயம் பிடித்துக் கொண்டது.

அவன் தன் நண்பனை மந்திரி மகனிடம் யோசனை கேட்டு அதன்படி காட்டிற்கு ஓடிப் போய் விட்டான். அரிச்சந்திரன் எவ்வளவு தேடியும் ரோஹிதன் அகப்படவே இல்லை. வருணனும் வந்து ''உம். யாகத்தை ஆரம்பி''



என்றுன். அரிச்சந்திரனும் ''என் மகன் மரணத்திற்குப் பயப்பட்டு எங்கோ ஓடி விட்டான். நானும் தேடித் தேடிப் பார்த்து விட்டு விட்டேன். அவன் அகப்படவே இல்லை'' எனக் கூறினுன். வருணனே கோபம் கொண்டு "என்னை இப்படியா ஏமாற்றினுய்? உனக்கு ஜலோதரம் என்ற நோய் பிடிக்கட்டும்'' எனச் சபித்து விட்டுப் போய் விட்டான்.

மகனும் காணுது போய் வருணனின் சாபமும் தனக்குக் கிடைத்ததே என அரிசந்திரன் மனம் புழுங்கினுன். ஒரு வருட காலம் ஆயிற்று. ரோஹிதனுக்கும் தன் தந்தையின் உடல்நிலை வருண



னின் சாபத்தால் கெட்டுவிட்டது என்று தெரிந்தது. அவன் தன் தந்தையைக் காணக் கிளம்பினுன். வழியில் இந்திரன் பிராம்மண வடிவில் அவன் முன் வந்து ''நீ போகாதே. போனுல் உன் தந்தை தன்னுடைய நோயைப் போக்கிக் கொள்ள யாகம் செய்து உன்னை வருணனுக்கு பலி கொடுத்து விடுவான். உன் தந்தை இறந்த பின் நீ போய் அரசனுகி அவனது நாட்டை ஆண்டுவா'' என்ருன். ரோஹிதனும் இந்திரன் சொன்னதைக் கேட்டுத் தன் தந்தையைக் காணச் செல்லவில்லை. மேலும் ஒருவருடம் கழிந்தது.

தன் தந்தை நோயால் படும் அவஸ்தையைக் கேட்டு ரோஹிதன் தன் உயிர் போனுலும் போகட்டும் என எண்ணித் தன் தந்தையைப் பார்க்கக் கிளம்பினுன். அப்போதும் இந்திரன் வந்து அவனைத் தடுத்து நிறுத்திவிட்டான்.

அரிச்சந்திரன் நோயால் அவஸ்தைப் பட்டான். அப்போது வசிஷ்டரிடம் அவன் என்ன செய்வது என யோசனை கேட்டான். அவரும் ''வருணன் உன் மகனை பலி கேட்கிருன். மகன் என்பது பலவகைப்பட்ட விதத்தில் இருக்கலாம். விலை கொடுத்து ஒருவனை நீ வாங்கினுலும் அவனும் உன் மகனே. எனவே யாரையாவது விலை கொடுத்து வாங்கி வருணனுக்கு பலி கொடுத்துவிடு. அவன் கேட்டது உன் மகனையே. ரோஹிதன் என்று குறிப்பிட்டுக் கேட்கவில்லையே'' என்ருர்.

அரிச்சந்திரனும் அப்படியே செய்வதாக கூறி மந்திரியிடம் யாரையாவது விலைக்கு வாங்கி வரும்படிக் கூறினுன். மந்திரியும் அஜிகர்த்தன் என்ற பரம தரித்திர பிரம்மணனின் இரண்டாவது மகனை சுனஸேபன் என்பவனை விலைக்கு வாங்கி வந்தான். சுனஸேபனை குளிப்பாட்டி

யாக பசுவாக யாகக் கம்பத்தில் கட்டினார்கள். அரிச்சந்திரன் யாகத்தை ஆரம்பித்தான். இதைக் கண்ட முனிவர்கள் மனம் வெதும்பினார்கள் சுனஸேபனும் தன் விதியை எண்ணிக் கதறி அழலானான். யாகப் பசுவை பலியாக வெட்டுபவன் கூட அச் சிறுவனின் கதறலையும் கண்ணீரையும் கண்டு தன்னால் அவனை வெட்ட முடியாது எனக் கூறி விட்டான்.

அப்போது என்ன செய்வது என அரிச்சந்திரன் திகைத்து நிற்கவே கூட்டத்தில் இருந்த சுனஸேபனின் தந்தை எழுந்து, ''நான் இவனை வெட்டுகிறேன். முன்பு இவனுக்குக் கொடுத்த விலையைப் போல இரண்டு மடங்கு இப்போது கொடுக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

அரிச்சந்திரன் மகிழ்ந்து போய் 'சரி' எனச் சம்மதித்தான். சபையோரோ பணம் என்றால் மனிதன் பெற்ற மகனைக் கூடக் கொல்லத் தயாராகி விடுகிறானே எனக் கூறி மனம் புழுங்கினார்கள். பலர் அஜிகர்த்தனைத் திட்டினார்கள்.

இதற்குள் விசுவாமித்திரர் அங்கே வந்தார். அவர் சுனஸேபனைக் கண்டு மனம் இரங்கி ''அரிச்சந்திரா! இந்தப் பாவச் செயலைப் புரியாதே. யாகத்தை நிறுத்து. உன் உயிர் உனக்கு எவ்வளவு உயர்ந்ததோ அதுபோல



இந்தச் சிறுவனுக்கும் தன் உயிர் உயர்ந்தது. உன் தந்தைக்குச் சாபம் இருந்தும் கூட நான் அவனை சொர்க்கத்திற்கு அனுப்பினேன். உன் சாபமும் போக வழி செய்யலாம். இந்த பிராம் மணச் சிறுவனைக் கொல்லாதே விட்டுவிடு'' என்ருர்.

அரிசந்திரனே தன் யாகத்தை நிறுத்த முடியாது எனவே விசுவாமித்திரர் கோபம் கொண்டு சுனஸேபனுக்கு ஒரு மந்திரத்தை உபதேசித்து ''இதை நீ உச்சரி. இந்த அரசனுல் என்ன செய்ய முடியுமோ பார்க்கிறேன்'' என்ருர்.

சுபஸேபனும் விசுவாமித்திரர் உபதேசித்த மந்திரத்தை ஜபித்தான். அதனுல் வருணன் அவன் முன் தோன்றி அவனை விடுவித்தான். அந்த யாகம் முடிந்ததாகக் கூறி அரிச்சந்திரனின் ஜலோதர வியாதியையும் போக்கினுன்.

அப்போது சுனஸேபன் ''பெரியோர்களே. இப்போது என் தந்தை யார் என்று சொல்லுங்கள் ஏனெனில் நான் என்னைப் பெற்ற தந்தையுடன் வாழ வேண்டும். இந்த மன்னர் என்னை மகனுக விலைக்கு வாங்கினுர். விசுவாமித்திரர் என்னைக் காப்பாற்றினுர். அதனுல் யார் என் தந்தை? அவருடன் செல்கிறேன்'' என்ருன்.

சிலர் அரிச்சந்திரன் என்றும் வேறு சிலர் அஜிகீர்த்தன் என்றும் மற்றும் சிலர் வருணன் என்றும் கூறினுர்கள்.

வசிஷ்டரோ ''விசுவாமித்திரரைத்தான் சுனஸேபனின் தந்தையாகக் கருத வேண்டும். ஏனெனில் அவர்தான் ஒரு தந்தை தன் மகனைக் காப்பது போல இவனைக் காத்தார்'' எனக் கூறினுர். சுனஸேபனும் விசுவாமித்திரருடன் கிளம்பிச் சென்ருன்.





# ஏன் குழப்பமா?

அங்கதேச மன்னன் அனங்கசேனனது நாட்டில் எங்கும் கலகமும் குழப்பமுமாக இருந்தது. எல்லோரும் தாம் செய்யும் தொழில்களை விட்டுவிட்டு போருக்குத் தயாராக ஆனுர்கள். நிலைமையை கட்டுப்படுத்த அனங்கசேனன் எவ்வளவோ சட்டதிட்டங்களைக் கொண்டு வந்தான் ஆனுல் அந்தச் சட்டங்களால் ஆத்திரப்பட்டு மக்கள் மேலும் குழப்பத்தைதான் விளைவிக்கலானுர்கள். அமைதியாக அவர்கள் இருக்கவில்லை.

இதைக் கண்ட அனங்கசேனன் தன் மந்திரியும் புரோகிதருமான ஞானசர்மாவிடம் ''ஏன் மக்கள் இப்படி நடக்கிருர்கள் என்று புரியவில்லை. இப்படி இவர்கள் கட்டுக்கடங்காமல் இருந்தால் நாம் ஆட்சியை எப்படிச் சரிவர நடத்துவது?'' என்று கேட்டான்.

அதற்கு ஞானசர்மா ''இதற்கு ஒரு கதை கூறுகிறேன். கேள்'' எனக் கூறி கதை சொல்லலானுர்.

பாதாள லோகத்தில் ராட்சஸ ராஜ்யம் நல்ல நிலையில் இருந்தபோது விகாரன் என்ற ராட்சஸன் குழப்பம் விளைவிக்கலானுன். அதைக் கண்ட பாதாளலோக மன்னன் அவனை நாட்டிலிருந்து போய்விடும்படி உத்தரவிட்டான். விகாரனும் பாதாள லோகத்திலிருந்து பூலோகத்திற்கு வந்து விட்டான்.

அவன் முதன் முதலாக அடி எடுத்து வைத்த இடம் ஒரு பாலைவனம். அங்கு அவனுக்குச் சாப்பிட எதுவுமே கிடைக்கவில்லை. எனவே மனிதர்கள் வாழும் பகுதியை அவன் அடைந்து கைக்குக் கிடைத்த மனிதர்களைப் பிடித்து ஒடித்து விழுங்கலானுன்.

காரை. குருமூர்த்தி



இதனுல் அந்நாட்டில் ஒரே பய பீதி ஏற்பட்டது. விகாரன் எப் போது தம் பகுதிக்கு வருவானே என்று எப்போதும் அங்குள்ள மக்கள் பயந்து கொண்டே இருக்க லானுர்கள்.

பூலோகத்தில் பல நாடுகள் இருந்தன. அவை தம்முள் மதத் தைக் கொண்டும், மொழியைக் கொண்டும் பகைமை பாராட்டி ஒன்றையொன்று வென்று அடக்க முயன்று கொண்டிருந்தன. இத ஞல் பலவித பயங்கரப் போர்க் கருவிகள் தயாரிக்கப்பட்டன.

விகாரனைப் பற்றிக் கேள்விப்பட் டதுமே வீரர்கள் பலர் தாமே முன் வந்து அந்த ராட்சஸனைப் பிடித்து அடக்குவதாகக் கூறினுர் கள். ஆனுல் பனைமர உயரமுள்ள விகாரனைச் சாதாரண மனிதர் களால் எந்த ஆயுதத்தைக் கொண்டு தாக்கி வீழ்த்த முடியும்? அவன் தங்கு தடையின்றி திரிந்து வந்தான். யாராலும் அவனை எது வும் செய்யமுடியவில்லை.

அப்போது பல நாட்டு அரசர் கள் ஒன்று கூடி விகாரனை எப்படி ஒழிப்பது என யோசனை செய்ய லானுர்கள். ஒரு அறிவாளி அவர் களிடம் ''லட்சக்கணக்கான எறும் புகள் ஒரே சமயத்தில் ஒரு பாம் பைத் தாக்கிக் கொன்று விட முடி யும். சிறு நார்களைக் கொண்டு திரிக் கப்பட்ட பெரியவடக் கயறுதான் மதயானையைக் கட்ட உதவுகிறது ஒற்றுமையை விட மிஞ்சிய பலம் வேறு எதுவும் இல்லை. எனவே மானிடர்களாகிய நாம் ஒன்று சேர்ந்து ஒரே சமயத்தில் அந்த ராட்சஸனைத் தாக்கினுல் அவன் தொல்லை ஒழிந்து விடும்" என்றுர். அதுவே சரியான யோசனை என்று எல்லோரும் ஏற்றுக் கொண்டார் கள்.

மறு நாளே விகாரனை எதிர்க்க மக்கள் கூட்டம் கூடியது. ஒவ் வொருவராக வந்து சேர்ந்து கோடிக் கணக்கான மக்கள் கூடி விட்டனர். அப்போது அவர்களி டையே மொழிப் பிரச்னையோ

மதப்பிரச்னையோ தலை தூக்க வில்லை. எல்லோருடைய ஒரே நோக்கம் விகாரனை ஒழிப்பது ஒன்றுகத்தான் இருந்தது.

அந்த மாபெரும் மக்கள் கூட்டம் விகாரனைச் சூழ்ந்து கொண்டது. விகாரனும் அவர்களோடு போர் புரியலானுன். அவனைக் கண்டு யாரும் பயந்து ஓடவில்லை. செத்தால் சாகிருேம் எனத் துணிந்து அவனைத் தாக்கினுர்கள். அவனை எல்லோரும் சேர்ந்து தள்ளி ஈக்கள் மொய்ப்பது போல அவன் மீது போய் ஒரேயடியாக விழுந்து நின்றுர்கள்.

அப்போது தான் விகாரன் மனதில் முதல் முதலாகப் பயம் தோன்றியது. அவ்வளவு பேர்களும் சேர்ந்து தாக்கும் போது தன்னுல் அவர்களை எல்லாம் அழிக்க முடியவில்லை எனக் கண்டு அவன் எழுந்து ஓடலானுன். அவன் ஓடும் போது கூடப் பலர் அவனது கால்களின் கீழ் சிக்குண்டு நசுங்கி இறந்தார்கள். பலர் அவனது உடலிலிருந்து குதித்துக் கை கால்களைக் கூட ஒடித்துக் கொண்டார்கள். ஆயினும் அவர்கள் கவலைப்படவில்லை. ராட்சஸன் ஓடி விட்டான் என்று கண்டு மகிழ்ந்து போனுர்கள்.

இவ்விதமாக விகாரனை மனிதர்கள் இரண்டு மூன்று தடவைகள் தாக்கி விரட்டினுர்கள். அவன் காயப்பட்டு அவர்கள் கண்களில் படாமல் தப்பி ஓடிக் காட்டின்





மத்தியில் போய்ச் சேர்ந்தான். அங்கே அவன் மிருகங்களை எல்லாம் ஒரேயடியாக அடித்துக் கொல்லாமல் தினமும் கொஞ்சம் கொஞ்சமாகக் கொன்று தின்று காலம் கழிக்கலானன். ஆனலும் அவன் மனதில் மனித மாமிசம் சாப்பிடக் கிடைக்காதா என்ற ஏக்கம் இருந்து வந்தது.

ஒரு நாள் காட்டில் ஓரிடத்தில் ஒரு மானிடப் பெண் இருப்பதைக் கண்டு ஓடிப் போய் அவளைப் பிடித்தான். அவளைத் தின்னும் நோக்கத்துடன் அவளது உடலை முறிக்க முயன்றன். ஆனல் அவள் அடுத்த வினடியே ஒரு ராட்சஸி யாக மாறினள்.

அவளைப் பார்த்த விகாரன் திகைத்துப் போனன். ஏனெனில் அவளை அவன் நன்கு அறிவான். அவன் பாதாளலோகத்தில் இருந்தவளே. அவள் பெயர் கஜநாபி.

அவள் விகாரனிடம் ''நீ பாதாளலோகத்தை விட்டு வந்ததிலிருந்து அது 'வெறிச்' சென்று போய் விட்டது போல நான் உணர்ந்தேன். அதனல் உன்னைத் தேடிக் கொண்டு இங்கு மானிட வடிவில் வந்தேன்'' என்றாள்.

விகாரன் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தைக் கூறினன். அது கேட்டு கஜநாபி சிரித்து ''அட பைத்தியமே. மனிதர்களுக்கு நம்மைப் போல பலம் இல்லாவிட்டாலும் புத்தி உள்ளவர்கள். அவர்களை நாமும் நம் அறிவால் வெல்ல வேண்டும். நாம் அவர்களிடையே அவர்கள் உருவிலேயே உலாவி உறவு கொண்டு ஏமாற்றி ஒழிக்கவேண்டும். அப்போது நம் வாழ்க்கை பாதாளலோகத்தில் இருப்பதை விட இங்கு நன்ருக இருக்கும்'' என்றாள். அப்போது முதல் அவர்கள் மானிட உருவில் மனிதர்களிடையே திரியலானர்கள் மனிதர்களுக்கு அறிவு இருந்த போதிலும் அவர்களிடம் சுயநலம் முழுக்க முழுக்கக் குடி கொண்டிருப்பதை அவர்கள் கண்டார்கள். அந்த மனித இயல்

பைப் பயன் படுத்தி அவர்கள் இருவரும் மனிதர்களிடையே அவ்வப்போது சண்டைகளை மூட்டி விட்டுக் கொண்டே இருந்தார்கள். அவர்களிடையே ஜாதிமத, மொழி வேறுபாடுகளைப் பெரிதாக்கி வளர்த்தார்கள். இதனல் மனிதர்கள் ஒருவரையொருவர் அடித்துக் கொள்ளலாயினர். இதில் இறந்தவர்களை விகாரனும் கஜநாபியும் தின்று மகிழ்ந்தார்கள். அவர்களுக்கு இந்த வாழ்க்கை பிடித்துப் போயிற்று.

இதனல் பூலோகத்தில் நிரந்தரமாக அவர்கள் தங்கி விட்டார்கள். அவர்களது சந்ததியார்களும் பூலோகம் முழுவதிலும் பரவி மனிதர்களிடையே மானிட உருவில் மறைந்து வாழலானார்கள் இதனல் தான் மனிதர்களில் பலர் ராட்சஸ குணம் படைத்தவர்களாகக் காண்கிறோம். இந்த ராட்சஸர்களை அடையாளம் கண்டு மனிதர்களிடமிருந்து விரட்டுவது முடியாத செயலாகி விட்டது. அவர்களை விரட்டினல் தான் உலகில் பூரண அமைதி நிலவும்.

ஞானசர்மா இந்தக் கதையை அனங்கசேனனுக்குக் கூறி "மக்கள் அமைதியை விரும்புபவர்களே. ஆனல் சுயநலம் காரணமாகப் புகுந்த ராட்சஸர்கள் அவர்களிடையே இருப்பதால் குழப்பமும் கலகமும் ஏற்படுகிறது. அந்த ராட்சஸர்களைக் கண்டு பிடித்து ஒழித்தால் நாட்டில் அமைதி நிலவும்'' என்றார்.

அனங்கசேனனுக்கு ஞானசர்மா கூறியது புரிந்தது. கலகமும் குழப்பமும் விளைவிப்போரைக் கண்டு பிடித்து அவர்களை தண்டித்து அவன் நாசகாரச் சக்திகளை அடக்கினன். அக் கொடிய சக்திகள் தலை தூக்க முடியாது போனதால் அவர்களிடையே இன, மத மொழி வெறிகள் இருக்கவில்லை. மக்கள் சுகமாக இருந்து வரலானர்கள்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 25

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1981 ஜனவரி மாத இதழில் வெளியிடப்படும்**



Brahmdev



D. N. Shirke

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.

★ நவம்பர் 10 தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 25 பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே.

★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி அம்புலிமாமா 'போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-26 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

---

## செப்டம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **பசி நகர்த்தும் கால்கள்**

இரண்டாவது போட்டோ: **பசி உயர்த்தும் கண்கள்**

பரிசு பெற்றவர்: **டி. தெய்வானை,**

குருவிகொண்டான்பட்டி, திருச்சி மாவட்டம்

பரிசுத் தொகை ரூ. 25ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.

Printed by B. V. REDDI at Prasad Process Private Ltd., and Published by B. VISWANATHA REDDI for CHANDAMAMA CHILDREN'S TRUST FUND (Prop. of Chandamama Publications) 188, Arcot Road, Madras-600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

# அம்புலிமாமா சந்தாதாரர்களுக்கு!

★

உங்களது விலாசத்தில் ஏதாவது மாற்றம் ஏற்பட்டால் மாதத்தின் 5-ந் தேதிக்கு முன்னதாகவே உங்களது சந்தா எண்ணைக் குறிப்பிட்டு புதிய விலாசத்தை எங்களுக்கு அறிவிக்கக்கோருகிறோம். இதில் தாமதம் ஏற்பட்டால் அடுத்த மாதத்தில்தான் புதிய விலாசத்திற்கு எம்மால் பிரதிகளை அனுப்ப முடியுமென்பதை நினைவூட்டுகிறோம்.

**டால்டன் ஏஜன்ஸீஸ்**

'சந்தமாமா பில்டிங்ஸ்' :: சென்னை - 26

# கண்ணை மூடிக்கொள்
# ஆசையை நினைத்துக்கொள்



ஆசைகள் பூர்த்தியடைய முன்னேற்பாடு அவசியம். உன்னுடைய ஆசை என்ன? புதிய பொம்மையா, பொம்மை வீடா, சைக்கிளா? உன்னுடைய சொந்த பணத்திலேயே இவைகளையெல்லாம் வாங்க முடியும். எப்படி?

உனக்காகவே கனரா பாங்க் ஏற்படுத்தியுள்ள 'பாலக்ஷேமா' டெபாசிட் திட்டத்தில் இன்றே சேமிக்க ஆரம்பிப்பதால், அவ்வப்பொழுது கிடைக்கும் சில்லறைகளை அழகான **பாலக்ஷேமா** சேமிப்புப் பெட்டியில் போட்டு வை. பெட்டி நிறைய, நிறைய பணத்தை அருகில் உள்ள கனரா பாங்கில் உன் கணக்கில் போட்டுக் கொண்டேயிருக்கலாம். நீ ஆசைப்பட்டதை வாங்குகிற அளவிற்கு பணம் வளர்ந்து கொண்டேயிருக்கும் — காரணம், பாங்கு வட்டியும் சேருகிறது.

உன்னுடைய ஆசைகள் நிறைவேற எவ்வளவு சுலபமான வழி! சேமிக்கப் பழகுவதற்கு எவ்வளவு அற்புதமான முறை!

மற்ற விவரங்களுக்கு அருகாமையிலுள்ள கனரா பாங்கில் இன்றே தெரிந்துகொள்.

மற்ற டெபாசிட் திட்டங்கள் : **காமதேனு, நித்யநிதி, நிரந்தரா.**

## பாலக்ஷேமா டெபாசிட்




## கனரா பாங்க்

(தேசியமாக்கப்பட்ட பாங்க்)
நாடெங்கிலும் 1200க்கும் மேற்பட்ட கிளைகள் உள்ளன.




maa CB 4 Tam 80




Campa
Campa
Campa